## இப்பொழுது விற்பனையாகிறது!

# மங்கை

### மே 1996

| | |
|---|---|
| ☆ இந்த நிலை மாறும் | –அனுராதா ரமணன் |
| ☆ பெண்களும் சட்ட விழிப்புணர்வும் | –அட்வகேட் மாலினி கணேஷ் |
| ☆ சாந்தம்பாறை மகாலட்சுமி | –வசந்தி சுந்தரராஜன் |
| ☆ மலடு நீங்க சித்த மருத்துவம் | –Dr. இரா. கண்ணன் |
| ☆ அழியாத அசோகவனங்கள் | –விமலா ரமணி |
| ☆ பெண்களே சுயபலத்தை அறியுங்கள் | –லதீகா சரண் |
| ☆ எத்துறையிலும் பெண்கள் | –ரஜினி ராஜேஷ் |
| ☆ கல்யாணம் மாறிப் போச்சு | –படுதலம் சுகுமாரன் |
| ☆ சுப்புடு பாராட்டிய சங்கீதக் குயில் | –காயத்ரி |
| ☆ தெரிந்த பெயர்... தெரியாத விபரம்... | –அனிதா ரத்னம் |
| ☆ உள்ளத்தின் ஓசைகள் | –அனுராதா ரமணன் |
| ☆ சுவையான சலாட் வகைகள் | –பிரேமா ராவ் |
| ☆ பழமொழிகள் கூறும் நல்மொழிகள் | –கீதா தெய்வசிகாமணி |
| ☆ பெண்கள் அன்றும் இன்றும் | –சுவர்ணா |
| ☆ சர்க்கரை நோய் ஒரு அலசல் | –Dr. மனோகரன் |
| ☆ குழந்தைகளிடம் கற்றுக் கொள்ளுங்கள் | –சுவாதி அமர்நாத் |
| ☆ சிக்கல் சிங்கார வேலன் | –ரமணி |
| ☆ பாலாவின் நாட்டியம் ஒரு தவம் | –சியாமளா |
| ☆ பெண்கள் தத்து எடுக்க | –நீலா கண்ணன் |
| ☆ சிறப்பு பேட்டி | –ஸ்ரீ ஜயேந்திர ஸ்வாமிகள் |

*மற்றும் ஏராளமான வீட்டுக் குறிப்புகள், வண்ணக் கோலங்கள்*

*மணமக்கள் தேவை விளம்பரங்கள், ராசி பலன்கள்.*

**அதிக பக்கங்களுடன்!**
**புதிய பொலிவுடன்!!**

**விலை ரூ. 9/-**

# கொடிய விலங்குகளை பயமுறுத்தி துரத்துங்கள்.



உங்கள் விருப்பத்திற்குள்ளான 11 நறுமணச் சுவைகள் கொண்ட ரஸ்னாவை மேலும் பரவசமடைய செய்யுங்கள். ரஸ்னா ஸாஃப்ட் ட்ரிங்க் கான்சென்ட்ரேட் ஸ்டாண்டர்ட் பேக்குகளின் மேல் அச்சடிக்கப்பட்ட 5 ரஸ்னா டைனோ ஸ்கேர் கேம் கூப்பன்களை சேகரித்து பரவசமூட்டும் இலவச டைனோ கேமைப் பெறுங்கள். ஆகையால் இப்போது ''ஐ லவ் யு ரஸ்னா'' என்று சொல்வதற்கு உங்களுக்கு மேலும் பல காரணங்கள் உள்ளன.

- இச்சலுகையின்றியும் பேக்குகள் கிடைக்கின்றன.
- இச்சலுகை 31 ஆகஸ்ட் 1996 வரை நடப்பிலிருக்கும்.




Mudra:EAMR:9266 Tam.




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி



## சுயமாக வேலை செய்யுங்கள்!

சுதந்திரம் அடைந்து ஐம்பது ஆண்டுகளான இந்தக் காலத்தில் பல அரசாங்கங்கள் புதிதாகப் பல பள்ளிக்களையும் கல்லூரிகளையும் பல்கலைக் கழகங் களையும் நமக்கு அளித்தன. கல்வித் திட்டத்தில் பல புதிய விஷயங்களையும் சேர்த்தன.

இந்த வளர்ச்சிக்கு ஏற்ப வேலை வாய்ப்புகள் உருவாகவில்லை. படித்து வேலை கிடைக்காமல் இருப்பவர்களே இப்போது அதிகம். இந்த நிலை எல்லா நாடுகளிலும் உள்ளது.



அண்மையில் கூடிய ஒரு மாநாட்டில் படித்து பயிற்சி பெற்ற ஆசிரியர் வேலை இல்லாமல் இருக்க வேண்டுமா என்ற கேள்வி எழுப்பப்பட்டது. அவரே வேலை செய்யக்கூடாதா? அரசாங்கத்தையும் பெரும் நிறுவனங்களையும் நம்பி இராமல் படித்தவர்கள் தாமே சுயமாகத் தொழில் புரிய வேண்டும். படித்து வேலைக்காக அலைபவர்கள் இது பற்றிச் சிந்திப்பார் களா?

மதிமுகம்: 98 மே 1996 புன்னகை: 5

தனிப்பிரதி: ரூ.5.00 வருட சந்தா: ரூ.60.00






# அம்புலிமாமா

மாதாமாதம் கதைகள் வாயிலாக இந்திய நாட்டின் கடந்த கால,
தற்கால மேன்மையை விவரிக்கிறது.

வண்ணப்படங்கள் அறுபத்து நான்கு பக்கங்களிலும் மிளிர, புராணங்கள்,
பழங்கதைகள், வரலாற்று நிகழ்ச்சிகள், பெரியோர்களின் வாழ்க்கை
ஆகியவற்றின் அடிப்படையில் அற்புதக் கதைகளையும் மேலும் சீரிய
கற்பனைக் கதைகளையும் இன்றைய நிலைக்கு ஏற்ப அளிக்கிறது.

11 மொழிகளிலும் சமஸ்கிருதத்திலும் கூட வெளிவருகிறது.

சந்தா விவரங்களை அறிய முகவரி:

**டால்டன் ஏஜன்சீஸ், 188 என். எஸ். கே. சாலை, சென்னை-600 026**

செய்திகளும் தகவல்களும்:

# நெருங்கிய தொடர்பு

ஆஸ்திரேலியாவில் மார்ச் 2ல் நடந்த பொதுத் தேர்தலில் ஜான் ஹாவர்ட் புதிய பிரதமரானார். அவர் அப்பதவியை ஏற்ற பின் தெற்கு ஆசியாவில் வலிமைமிக்க நாடாக ஆகிவரும் இந்தியாவுடன் நெருங்கிய தொடர்பு, வைத்துக் கொள்ளப் போவதாக அறிவித்தது மகிழ்ச்சிக்குரிய விஷயம்.



ஆஸ்திரேலியா 'லேபர் பார்ட்டி'யின் ஆட்சியில் இருந்தபோது ஜான் ஹாவர்ட் 13 ஆண்டுகாலம் எதிர்க்கட்சியான லிபரல் - நேஷனல் கட்சியில் இருந்தார். இக்கட்சிக்கு தற்போது 148 பிரதிநிதிகள் கொண்ட சபையில் 90 இடங்கள் கிடைத்தன. லேபர் பார்ட்டிக்கு 50 இடங்களே கிடைத்தன.

கிரிக்கெட் விளையாட்டிற்குப் பெயர் பெற்றவர்கள் ஆஸ்திரேலியர்கள். லேபர் பார்ட்டியின் பால்க்கீடிங் தலைமையிலுள்ள நீண்ட கால ஆட்சியை மக்கள் மாற்ற விரும்பினார்கள். இந்த மாற்றம் அயல் நாட்டுக் கொள்கையாலோ அல்லது பாதுகாப்பு பற்றியோ ஏற்படவில்லை. தலைமை மாற்றத்தோடு தொழிற்சங்க ஆதிக்கத்தையும் மட்டுப்படுத்த மக்கள் விரும்பினார்கள். தொழிலாளிகளும் முதலாளிகளும் தம் தகராறுகளைத் தீர்த்துக் கொள்ள முயலும் போதெல்லாம் இத்தொழிற் சங்கத் தலைவர்கள் தலையிட்டு தம் இஷ்டப்படி நிபந்தனைகளை விதிக்கலானார்கள். இதனால் ஒழுங்கு கட்டுப்பாடு ஆகியவை தொடர்பாக முதலாளிகள் நடவடிக்கைகள் எடுக்கும் நிலை உருவாகியது.

லிபரல் நேஷனல் கட்சி தொழிற் சங்கத் தலைவர்களின் தலையீடு இல்லாமல் தொழிலாளிகளும் முதலாளிகளும் ஒப்பந்தம் செய்து கொள்ளும் கான்ட்ராக்ட் முறையைக் கொண்டு வருவதாக வாக்களித்தது. இதை அந்த இருதரப்பினரும் ஏற்றனர்.

கீடிங் அரசாங்கம் அரசியல் அமைப்பை எதிர்த்துக் குரல் கொடுத்ததால் பிரிட்டனிலிருந்து சற்றுத் தள்ளியே இருந்தது. பிப்ரவரி 16ல் ஆஸ்திரேலியாவின் 22வது கவர்னர் ஜெனரலாக சர் வில்லியம் டீன் பதவி ஏற்றார். அவர் ஒலிம்பிக் போட்டிகள் ஆஸ்திரேலியாவில் நடக்கும் என அறிவித்தார். கீடிங்கும் தேர்தல் பிரசாரத்தில் அதையே கூறினார்.

ஜான் ஹாவர்ட் வழக்கறிஞர். ஐம்பத்தாறு வயதானவர். 1983ல் மால்கம் பிரேஜர் அமைச்சரவையில் நிதியமைச்சராக இருந்தவர். இவர் அக்டோபர் மாதத்தில் நம் நாட்டிற்கு வரவிருக்கிறார்.

1944ல் நம் நாட்டிலிருந்து ஆஸ்திரேலியாவில் உயர்கல்வி பெற 1200 மாணவர்கள் சென்றனர். சென்ற ஆண்டில் 2500 மாணவர்கள் சென்றிருக்கிறார்கள். இனி நம் நாடும் ஆஸ்திரேலியாவும் மேலும் நெருங்கிய தொடர்புகளை வைத்துக் கொள்ளும் என எதிர்பார்க்கலாம்.




# சீர்தூக்கிப் பார்!

சுந்தரமும் மூர்த்தியும் ஒரே ஊரில் இருப்பவர்கள். சுந்தரம் எந்த வேலையையும் வெற்றிகரமாகச் செய்து முடிப்பவன். ஆனால் மூர்த்தியோ ஒரு சிறு வேலையைக் கூடச் சரியாகச் செய்யத் தெரியாதவன். இதனால் ஊரார் மூர்த்தியிடம் ''நீ சுந்தரத்தைப் போல ஒரு வேலையில் முழு கவனம் செலுத்துவது இல்லை. ஒரு வேலையைச் செய்து முடிக்க முழுக் கவனம் தேவை'' என்று கூறி வந்தார்கள்.

ஒருநாள் அந்த ஊருக்கு ஒரு சன்னியாசி வந்தார். அவர் மிகுந்த சக்தி வாய்ந்தவர் என ஊரில் பலரும் பேசிக் கொண்டார்கள். அவரும் ஏதேதோ அதிசயங்களைச் செய்து காட்டி ஊராரிடம் நிறைய காணிக்கை கேட்டு வாங்கிக் கொண்டிருந்தார். ஊராரும் அவர் கேட்ட காணிக்கையைக் கொடுத்து வரலானார்கள்.

சுந்தரத்திற்கு அந்த சன்னியாசி மீது சந்தேகம் ஏற்பட்டது. உண்மையான சன்னியாசியானால் மக்களிடம் ஏன் பணம் கேட்க வேண்டும் என்று அவன் தன் நண்பர்கள் சிலரிடம் கூறவே அவர்களும் ''நீ அவனைக் கபட சன்னியாசி என நிரூபி'' என்றனர். அவனும் சில நாட்களுக்குள் நிரூபிப்பதாகக் கூறினான்.

மூர்த்திக்கும் சன்னியாசி மீது சந்தேகம் ஏற்பட்டது. சுந்தரம் அவனைக் கபட சன்னியாசி என ஊராருக்கு நிரூபிப்பதற்கு முன் தானே அப்படி நிரூபித்துக் காட்ட வேண்டுமென்று அவன் எண்ணினான். அதனால் ஒருநாளிரவு அந்த சன்னியாசி தங்கி இருக்கும் இடத்திற்குச் சென்றான். அப்போது அந்த சன்னியாசி குறட்டை விட்டு தூங்கிக் கொண்டிருந்தார். மூர்த்தி அவரது மீசையையும் தாடியையும் பார்த்தான். அவை போலியானவை

—சிவனார் செல்வன்—

என்று அவனுக்குத் தெரிந்து விட்டது.

அவன் அந்தப் பொய்த் தாடியையும் மீசையையும் பிடித்து பலமாக இழுத்தான். அவை கையோடு வந்து விட்டன. அப்போது சன்னியாசி விழித்து எழவே மூர்த்தி தாடி, மீசையுடன் அங்கிருந்து சட்டென ஓடி விட்டான்.

மறுநாள் அந்த சன்னியாசி ஊர்க்காரர்களுடன் பேசிக் கொண்டிருக்கையில் மூர்த்தி வந்து ''இவன் கபட சன்னியாசி. நேற்றிரவு இவனது பொய்த் தாடியையும் மீசையையும் நான் எடுத்து வந்து விட்டேன்'' என்றான். அதுகேட்டு அங்கிருந்தோர் கேலியாகச் சிரித்தனர். ஏனெனில் சன்னியாசியின் முகத்தில் தாடியும் மீசையும் இருந்தன. மூர்த்தியும் அவை இருப்பது கண்டு திகைத்தான்.

ஆனாலும் அவன் ''நேற்றிரவு இவன் முகத்திலிருந்த தாடியையும் மீசையையும் நான் எடுத்து வந்தேன். இப்போது அவை என் தோளில் தொங்கும் பையில்தான் உள்ளன. இப்போது இந்த சன்னியாசியின் முகத்தில் இருப்பவையும் பொய்த் தாடியும் மீசையுமே. அவற்றையும் இப்போதே எடுக்கிறேன்'' என்று கூறிச் சன்னியாசியை அணுகினான்.

தன்னை நோக்கி வந்த மூர்த்தியை அந்த சன்னியாசி தள்ளிவிட்டு ''உன்னை மன்னிக்கிறேன். ஆனால் தெய்வம் உன்னை மன்னிக்காதே. எனக்குத் தீங்கு இழைப்பவன்,



என்னைத் தாக்குபவன் படுநாசம் அடைவான். அதனால்தான் இவனை இப்படித் தள்ளினேன். நேற்றிரவு என் தாடி, மீசையை எடுத்து வந்ததாகக் கூறுகிறானே! எங்கே அவற்றை இவன் இப்போது காட்டட்டும் பார்க்கலாம்'' என்றான்.

மூர்த்தியும் ''இதோ காட்டுகிறேன்'' என்று கூறித் தன் தோளில் மாட்டி இருந்த பைக்குள் கையை விட்டான். ஆனால் அங்கே அவன் வைத்திருந்த பொய்த் தாடியும் மீசையும் இருக்கவில்லை. அவன் உடனே ''இந்த சன்னியாசி ஏதோ மாயாஜாலம் செய்து அவற்றை மறைந்து போகும்படிச் செய்து விட்டான்'' என்று கத்தினான்.



முடியாது'' என்றான்.

மூர்த்தியும் ''நீ இவனை என்ன செய்யப் போகிறாய்?'' என்று கேட்டான். சுந்தரமும் ''இந்தக்கபட சன்னியாசியைப் பற்றி விசாரித்து முழு விவரங்களையும் தெரிந்து கொண்டிருக்கிறேன். இவனது சொந்த ஊர் முத்தூர். இவனுக்கு ஒரு மனைவியும் மூன்று குழந்தைகளும் உள்ளனர். அவர்கள்சுகமாக வசதியுடன் வாழ்ந்து வருகிறார்கள். ஆனால் அவர்களுக்கு இவன் எப்படி சம்பாதிக்கிறான் என்பது மட்டும் தெரியாது. நாம் இப்போது இதனைச் சொன்னால் ஊரார் அந்தக் கபட சன்னியாசியை அடித்து விரட்டி விடுவார்கள். அவன் வேறொரு ஊருக்குப் போய் இதே போல் மோசடியில் இறங்குவான். அதனால் யாருக்கும் நஷ்டம் ஏற்படாத விதத்திலும் இவனும் திருந்தித் தன் குடும்பத்தோடு சேர்ந்து வாழும் விதத்திலும் வழி செய்ய வேண்டும்'' என்றான்.

சுந்தரம் மறுநாள் காலையில் தனியாகச்சன்னியாசி இருந்த இடத்திற்குப் போய் அவனைக் கண்டு ''உன்னைப் பற்றிய விவரங்கள் தெரிந்து விட்டன. இப்போது என்ன செய்யப் போகிறாய்?'' என்று கேட்டு அவனைப் பற்றிய விவரங்களைக் கோர்வையாகக் கூறினான். அதைக் கேட்ட கபட சன்னியாசி பதறலானான். அப்போது சுந்தரம் நல்லவிதமாக ''நீ பயப்பட வேண்டாம். உன்னைப் பற்றி நான்

அவன் கூறியதை அங்கிருந்த யாருமே லட்சியம் செய்யவில்லை. அவர்கள் நடந்த சம்பவத்திற்குச் சன்னியாசியிடம் மன்னிப்பு வேறு கேட்டுக் கொண்டார்கள். மூர்த்தி தலை குனிந்தவாறே அங்கிருந்து சென்றான். அப்போது சுந்தரம் அவ் வழியே வந்து கொண்டிருப்பது கண்டு அவனருகே சென்றான்.

மூர்த்தி நடந்ததை எல்லாம் சுந்தரத்திடம் விவரமாகச் சொல்லவே அவனும் ''நீ அவசரப்பட்டு விட்டாய். எதிலும் நிதானம் வேண்டும். இந்த சன்னியாசி வேஷம் போடும் மோசக்காரன்தான். உன்னிடமிருந்து இப்போது இவன் தப்பி விட்டான். ஆனால் இவன் என்னிடமிருந்து தப்ப

யாரிடமும் எதுவும் சொல்ல மாட்டேன். நீ என் ஊரில் காணிக்கையாக வாங்கியவற்றை எல்லாம் அவரவர்களுக்குத் திருப்பிக் கொடுத்து விட வேண்டும். அதன் பின் நீ முத்தூருக்குப் போய் உள்ளதைக் கொண்டு திருப்தியுடன் உன் குடும்பத்தோடு வாழ வேண்டும். சரியா?'' என்று கேட்டான்.

சன்னியாசியும் அதற்குச் சம்மதித்து சுந்தரம் கூறியபடி செய்து விட்டு அந்த ஊரை விட்டே சென்று விட்டான். ஊராரும் அவனை மிக்க மரியாதையுடன் வழி அனுப்பி வைத்தார்கள்.

மூர்த்தியின் தாயார் தினமும் ஆற்றிற்குப் போய்க் குடிக்கத் தண்ணீர் குடத்தில் நிரப்பி எடுத்து வருவது வழக்கம். ஒருநாள் அப்படி நிறை குடத்தோடு அவள் வீட்டிற்குள் நுழைந்த போது கால் இடறவே குடத்தைக் கீழே போட்டவாறே விழுந்து விட்டாள். அவள் மூர்த்தியிடம் ''நீ போய்த் தண்ணீர் சுமந்து வீடுகளுக்குக் கொடுக்கும் வீரப்பனிடம் நம் வீட்டிற்கும் இன்று தண்ணீர் கொடுத்து விட்டுப் போகும்படிச் சொல்'' என்று சொன்னாள்.

வீரப்பன் வீடுகளுக்குக் குடி தண்ணீர் கொண்டு வந்து கொடுப்பவன். மூர்த்தி வீரப்பனைத் தேடிக் கொண்டு போனபோது அவன் மளிகைக்கடை மன்னாரின் வீட்டிலிருந்து குடங்களோடு வந்து கொண்டிருந்தான்.



வீரப்பன் அவனை நிற்கும்படி சைகை செய்தும் அவன் நிற்காமலேயே எங்கோ பார்த்துக் கொண்டு போனான். இதில் ஏதோ ரகசியம் இருக்கிறதென மூர்த்தி எண்ணி அவன் பின்னாலேயே அவனுக்குத் தெரியாமல் சென்றான். கொஞ்ச தூரம் போய் வீரப்பன் தன் குடிசைக்குள் போய்க் கதவை மூடிக் கொண்டான். மூர்த்தி கதவருகே போய் அதிலிருந்த இடுக்கின் வழியாக உள்ளே அவன் என்ன செய்கிறான் என்று பார்க்கலானான்.

வீரப்பன் தான் கொண்டு வந்த குடங்களில் ஒரு டப்பாவிலிருந்து ஏதோ எண்ணெயை விடவே அக்குடங்கள் நிரம்பின. வீரப்பன் சுத்தமான சமையல் எண்ணெயில் வேறு



ஏதோ எண்ணெயை விட்டுக் கலப்படம் செய்தான் என்று மூர்த்திக்கு விளங்கி விட்டது. வீரப்பன் அக்குடங்களைத் தூக்கிக் கொண்டு வெளியே வரத் தயாராகவே மூர்த்தி சட்டென ஒரு மறைவிடத்தில் ஒளிந்து கொண்டான்.

வீரப்பன் தன் குடிசையிலிருந்து நேராக மன்னாரின் வீட்டிற்குச் சென்றான். அதுகண்டு மளிகைக் கடை மன்னார்தான் வீரப்பனைக் கொண்டு சமையல் எண்ணெயில் கலப்படம் செய்கிறான் என்ற முடிவுக்கு மூர்த்தி வந்து விட்டான். அப்போது அவ்வழியாக சுந்தரம் வரவே மூர்த்தி ஓடிப் போய் அவனிடம் அதைக் கூறி ''இம்முறை நான் அவசரப்பட மாட்டேன். வீரப்பன் கலப்படம் செய்ய எந்த எண்ணெயை எங்கிருந்து வாங்கி எப்படிக் கொண்டு வருகிறான் என்று கண்டு பிடிக்கப் போகிறேன்'' என் றான்.

மூர்த்தி சொன்னதைக் கேட்டு சுந்தரம் அங்கிருந்து வேகமாக ஓடினான். ஊரார் சிலரை அழைத்துக் கொண்டு மன்னாரின் மளிகைக் கடை முன் நின்று அவன் கூச்சல் போட்டான். மன்னார் தனக்கு எதுவுமே தெரியாது என்றான். எனவே சுந்தரம் இருவரோடு வீரப்பனின் குடிசைக்குப் போய் மட்ட எண்ணெய் வைக்கப்பட்டிருந்த டப்பாவைக் கொண்டு வந்து காட்டினான்.

மன்னார் உடனே வீரப்பனைக் கூப்பிட்டு ''இதென்ன விஷயம்?'' என்று கேட்டான். அப்போது அவன் ''எஜமானி அம்மாதான் இப்படிச் செய்யச்சொன்னார். இதனால் கிடைக்கும் உபரிப் பணத்தில் அவர் பட்டுப் புடவை வாங்கிக் கொள்ள அவரது கணவருக்குத் தெரியாமல் இதைச் செய்யச் சொன்னார். இன்றுதான் இதை ஆரம்பித்தேன். ஆனால் உடனேயே அகப்பட்டுக் கொண்டு விட்டேன்'' என்றான்.

ஊரார் சுந்தரத்தைப் பாராட்டினார்கள். மன்னாரைக் கடுமையாக கண்டித்து, வியாபாரத்தை ஒழுங்காக நடத்தும்படிக் கூறிவிட்டுச் சென்றார்கள். இதை எல்லாம் கண்டு மூர்த்தி ஆத்திரம் கொண்டான். அவன் சற்று நேரம் கழித்து சுந்தரத்தைத் தனிமையில் கண்டு ''நீ என்னவோ நான் நிதான

மாக நடக்க வேண்டும், அவசரப்படக் கூடாது என்றாயே. ஆனால் நான் சொன்னதைக் கேட்ட பின் அவசரமாக ஓடி மன்னாரின் கடை முன் கூட்டம் சேர்த்து நல்ல பெயர் பெற்று விட்டாயே. இது சரியா?'' என்று கேட்டான்.

சுந்தரமும் ''நான் எல்லோரிடமும் நீதான் வீரப்பன் செய்ததைக் கண்டு பிடித்ததாகக் கூறினேன். ஊராரையும் இந்தக் கலப்படம் பற்றி எச்சரித்தேன். எதில் நிதானம் வேண்டும், எது உடனடியாக செயல்பட வேண்டும் என்பதை நாம்தான் தீர்மானிக்க வேண்டும். இந்தக் கலப்பட எண்ணெயை ஊரார் வாங்கி உபயோகித்தால் அவர்களது உடல் நலம் கெடும். உயிருக்கே கூட ஆபத்தும் வரலாம். இது உடனடியாக எச்சரிக்கப்பட வேண்டிய விஷயம். இதைச் செய்ததால் மக்களுக்கு நன்மை ஏற்பட்டது'' என்றான்.

அப்போது மூர்த்தி ''கபட சன்னியாசி விஷயத்தில் ஏன் நிதானத்தைக் கடைப்பிடித்தாய்?'' என்று கேட்டான். சுந்தரமும் ''அந்த விஷயத்தில் நிதானமே தேவை. சன்னியாசியை தண்டிப்பது தேவையற்றது. ஆனால் ஊராரை எச்சரித்து மன்னாரைக் கண்டிப்பது மிக அவசரமாகச் செய்ய வேண்டிய வேலை. அதைத்தான் செய்தேன்'' என்றான்.

மூர்த்தியும் ''எப்போது நிதானம் வேண்டும், எப்போது அவசரப்பட வேண்டும் என்பதை எவ்வாறு அறிவது?'' என்று கேட்டான். சுந்தரமும் ''இது அவனவன் அறிவால் கண்டறிய வேண்டியதுதான். ஒரு வேலையில் சுய லாபம் பாராமல் பொது நலனைக் கண்டு செயல்பட்டால் போதும். என்றான்.

அப்போது மூர்த்திக்குத் தன்னிடம் என்ன குறை உள்ளது என்பது தெரிந்தது. அன்று முதல் எந்த வேலை செய்தாலும் சுந்தரத்தின் யோசனையை நினைவு கொண்டு வேலையில் முழு கவனம் செலுத்தி எல்லோரிடமிருந்தும் நல்ல பெயர் பெற்றான்.



# பிறந்த லக்னம்!

ஒரு ஜமீன்தாரரின் திவான் திருவேங்கடம். அவன் பணத்தாசை பிடித்தவன். மக்களிடமிருந்து மட்டுமல்லாமல் தன் கீழ் பணி புரியபவர்களிடமிருந்தும் பணம் கேட்டு வாங்கி விடுவான். அதற்கு 'அன்பளிப்பு' என்ற பெயரை அவன் அளித்திருந்தான்.

ஒருமுறை தன் பிறந்தநாள் என்று எல்லா உத்தியோகஸ்தர்களை அவன் அழைத்திருந்தான். திவான் கடக லக்னத்தில் பிறந்தவனாதலால் அவன் கீழ் பணி புரிபவர்கள் தங்கத்தாலான நண்டு ஒன்றைப் பரிசாக அளித்தனர். அப்போது அவன் அவர்களிடம் ''பேஷ். நான் கடக லக்னத்தில் பிறந்ததை நினைவு படுத்த நண்டின் அளவில் தங்கத்தில் அதன் அளவிற்கான உருவத்தை செய்து 'அன்பளிப்பு' அளித்தீர்கள். மிக்க நன்றி. அடுத்த மாதம் என் மனைவியின் பிறந்த நாள் வருகிறது. அவள் பிறந்தது மகரலக்னம். அப்போதும் இது போல அன்பளிப்பை எதிர் பார்க்கிறேன்'' என்றான்.

அப்போது திடீரென ஜமீன்தாரர் வந்து ''திவான்! அடுத்த வாரம் என் பிறந்தநாள் வருகிறது. நான் பிறந்தது சிம்ம லக்னம், நானும் உங்களிடமிருந்து நிஜ, சிங்கத்தின் அளவிற்குத் தங்கச் சிலையை 'அன்பளிப்பாக' எதிர்பார்க்கிறேன்'' என்றார்.

திவான் திகைத்து நின்றான்!






## 10

(தன் ஆட்களையும் கப்பல்களையும் இழந்த ரூபதரன் வையாசியா கடற்கரையில் ஒதுக்கப்பட்டான். அவனுக்கு மகா மேதி மன்னன் ஆதரவு அளித்துத் தன் விருந்தினனாக வைத்துக் கொண்டான். அவனை இசை, நடனம் முதலியவற்றால் களிப்பத்தான். இசை நிகழ்ச்சியில் பாடகர் ட்ராய் நகர மரக்குதிரைப் பற்றிய நிகழ்ச்சியைப் பாடவே, ரூபதரன் கண்ணீர் வடித்தான். அது கண்டு ஆச்சரியப்பட்டு மன்னன் அவனைப் பற்றிய விவரங்களைக் கேட்கலானான். அப்போது–)

ரூபதரனும் மகாமேதி மன்னனிடம் தன் பெயரையும் ஊரையும் கூறி ட்ராய் நகர் வீழ்ச்சிக்குப் பின்தான் பட்ட கஷ்டங்களை எல்லாம் விவரமாகக் கூறினான். அவன் கூறியதை எல்லாம் கேட்ட மகாமேதி மன்னனும் மற்றவர்களும் ஆச்சரியப்பட்டனர்.

அப்போது மகாமேதி மன்னன் அங்கிருந்தவர்களிடம் ''இவரது துயரக் கதையைக் கேட்ட நாம் ஒவ்வொருவரும் இவருக்குக் கணிசமான பொருளுதவி செய்ய வேண்டும். நான் நிறையத் தங்கமும் பட்டாடைகளும் அளிக்கிறேன்'' என்றான். மற்றவர்களும் தாமும் அவனுக்குப் பொருளுதவி செய்வதாகக் கூறினார்கள்.

மறுநாள் அவனுக்குக் கொடுக்கப்பட்ட பொருள்களெல்லாம் கடற்கரைக்குக் கொண்டு வரப்பட்டன. மகாமேதி தானே வந்து அவற்றை



எல்லாம் கப்பலுள் ஒரு அறைக்குள் வைக்க ஏற்பாடு செய்தான். அன்று ரூபதரனுக்கு ஒரு பெரும்விருந்து அளிக்கப்பட்டது. எல்லோரும் அதில் உற்சாகத்தோடு கலந்து கொண்டு ரூப தரனை வழியனுப்ப வந்தனர்.

ரூபதரனும் விருந்துண்டு பானங். களை அருந்தினான். ஆனால் அவன் மனமோ எப்போது தன் நாட்டை அடைவது என துடித்தது. விருந்து முடிந்ததும் அவன் எழுந்து நின்று ''அருமைச் சகோதரர்களே! நீங்கள் செய்யும் உதவியை மறக்க மாட்டேன். என் தாய் நாட்டை அடைய நீங்கள் செய்த உதவியும், நீங்கள் அளித்த பரிசு களும் என்னை மெய்சிலிர்க்க வைத்து விட்டன. நீங்கள் நெடுங்காலம் வளமையுடன் வாழ வாழ்த்துகிறேன்'' என்றான். அது கேட்டு யாவரும் மகிழ்ந்தனர்.

ரூபதரன் மன்னனிடமும் அரசியிட மும் விடை பெற்றுக் கொண்டான். அரசியும் அவனுக்குப் பட்டாடை களை அளித்தாள். உணவுப் பண்டங் களைப் பணிப் பெண்களிடம் கொடுத்து அவற்றை அவன் செல்லும் கப்பலில் வைக்கச் சொன்னாள். கப் பலைச் செலுத்துபவர்களும் கப்பலுக் குள் சென்றார்கள். ரூபதரன் ஓய் வெடுக்க ஒரு கட்டிலைப் போட்டு அதில் பட்டு மெத்தையை விரித்து வைத்திருந்தார்கள்.

ரூபதரனும் யாவரிடமும் விடை பெற்றுக் கொண்டு கப்பலில் ஏறி னான். கப்பலும் அங்கிருந்து சென்றது. ரூபதரன் கட்டிலில் படுத்தான். அடுத்த விநாடியே அவன் தூங்கி விட்டான். இனி தனக்கு எவ்விதக் கஷ்டமும் இல்லை என்ற நினைப்பே அவனை மெய்மறந்து தூங்க வைத்தது. கப்ப லும் வேகமாக சென்று இரண்டாவது நாள் இதாகாவை அடைந்தது.

கப்பலை நிறுத்திய மாலுமிகள் ரூபதரன் அயர்ந்து தூங்குவது கண்டு அவனைக் கட்டிலோடு கரையில் கொண்டு போய் வைத்தனர். அவனது பரிசுப் பொருள்களை எல்லாம் அவனைச் சுற்றி வைத்து விட்டு அவர் கள் கப்பலுக்குச் சென்று அதனை ஓட்டிச் கொண்டு திரும்பிப் போய் விட்டார்கள்.

அங்கிருந்து சற்று தூரத்தில் ஒரு குகை இருந்தது. அதற்கு தேவ கன்னிகள் அடிக்கடி வந்து போவார்களாம். அங்கு யார் வேண்டுமானாலும் போகலாம். ரூபதரன் கண் விழித்த போது எங்கும் புகைப் பனி சூழ்ந்திருந்தது. எதையுமே அவனால் பார்க்க முடியவில்லை. தான் மீண்டும் ஏதோ ஆபத்தில் அகப்பட்டு விட்டதாகவே அவன் எண்ணிக் கலங்கினான். தன்னைச் சுற்றி தனக்குக் கிடைத்த பரிசுப் பொருள்களைப் பார்த்தான். அவற்றை எங்கே பத்திரமாக வைப்பது என்றும் யோசிக்கலானான்.



இப்படி அவன் யோசித்துக் கொண்டிருக்கையில் ஆட்டுக்காரன் ஒருவன் அங்கு வந்தான். அப்போது புகைப்பனி விலகிக் கொண்டிருந்தது. ரூபதரன் அந்த ஆட்டுக்காரனிடம் ''அப்பனே! இது எந்த நாடு? நான் வேறு நாட்டிலிருந்து வந்தவன். அதனால் இது பற்றித் தெரியவில்லை'' என்றான்.

அதற்கு அந்த ஆட்டுக்காரன் ''ஓ! நீங்கள் சரியாகத் தெரிந்து கொள்ளவில்லையா? இந்த இதாகாவைப் பற்றி அறியாதவர் உலகில் யாருமே இருக்க முடியாதே. இதுபற்றி ட்ராய் நகரம் கூட அறிந்துள்ளதே'' என்றான். அது கேட்டு ரூபதரன் மகிழ்ந்தாலும் அதை வெளியே காட்டாமல் மிகவும் சாமர்த்தியமாக ''ஆமாம். க்ரீட் தீவில் கூட இந்நாட்டைப் பற்றிச் சிறப்பாகத் தான் கூறினார்கள். நான் ஒரு கொடியவனைக் கொலை செய்து விட்டுத் தலைமறைவாகத் தப்பி ஓடி வந்திருக்கிறேன்'' என்றான்.

அவன் இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே ஆட்டுக்காரன் திடீரென மறைந்து போனான். அந்த இடத்தில் புத்திமதி தேவதை நின்று புன்னகை புரிந்தவாறே ''ரூபதரா! நீ தான் எப்படி எல்லாம் நடிக்கிறாய்? எப்படி எல்லாம் கதை விடுகிறாய்! நீ உன் தாய் நாட்டை அடைந்தும் உன் விஷமப் பேச்சை விடவில்லையே. உன் வேலைத்தனம் எல்லாம் என்னிடம் எடுபடாது. உன்னை எப்படியோ உன் நாட்டிற்கே கொண்டு வந்து சேர்த்து விட்ட போதிலும் உன் கஷ்டங்கள் தீர்ந்து விடவில்லை. அதனால் நீ



பதை நம்ப வைக்கிறேன்'' என்று கூறித் தன் கையை ஆட்டினாள்.

மறுநிமிடமே எங்கும் சூழ்ந்திருந்த புகைப் பனி விலகியது. அப்போது ரூபதரன் எல்லாவற்றையும் தெளிவாகப் பார்க்கலானான். புத்திமதி தேவதை அவனது பொருள்களை எல்லாம் எடுத்துக் கொண்டு போய் அருகிலிருந்த குகைக்குள் பத்திரமாக வைத்தது. பிறகு அக்குகையின் வாசலை ஒரு பெரிய பாறையால் மூடியது.

அதன் பிறகு அது ''ரூபதரா! சிலகயவர்கள் மூன்று வருடங்களாக உன் வீட்டில் இருந்து கொண்டு உன் சொத்தை நாசமாக்கிக் கொண்டிருக்கிறார்கள். உன் மனைவியிடம் சுயம் வரம் நடத்தி கணவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி வற்புறுத்தி வருகிறார்கள். அவர்களுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டியது இப்போது உன் முதல் பொறுப்பு. உன் மனைவியும் அவர்களுக்குக் கோபமும் ஆத்திரமும் மூட்டாமல் நீ எப்போது வரப் போகிறாய் என்றே காத்துக் கொண்டிருக்கிறாள்'' என்று கூறியது.

ரூபதரனும் ''தாயே! உன் தயவு இருந்தால் அவர்களை எல்லாம் நான் விரட்டி விடுவேன். எனவே நான் என்ன செய்ய வேண்டும் என்று நீயே கூறு'' என்றான். அத்தேவதையும் ''முதலில் உன் உருவத்தையே மாற்றி விடுகிறேன். அதனால் உன்னை யாருமே அடையாளம் கண்டு கொள்ள முடியாது. உன் மகனும் உன் மனைவி

இங்கு வந்திருப்பது ஒரு ஈ, காக்காய்க்குக் கூடத் தெரியக் கூடாது'' என்றது.

ரூபதரனும் ''தாயே! உண்மையிலேயே நான் இதாகாவில்தான் இருக்கிறேனா? என்னால் நம்ப முடியவில்லையே!'' என்று கேட்டான். புத்திமதி தேவதையும் ''நீ எப்போதும் எதையும் சட்டென நம்பாதவன். வேறு யாராவது இருந்தால் தன் மனைவி மக்களைப் பற்றி கேள்விகளாகக் கேட்டிருப்பார்கள். நீயோ இப்போது இருக்கும் இடம் இதாகாவா என்று சந்தேகப்படுகிறாய். இதுவும் ஒரு விதத்தில் நல்லதற்குத்தான். உன் மனைவி இரவு பகலாக உன்னை எதிர் பார்த்துக் காத்திருக்கிறாள். முதலில் நீ உன் நாட்டில்தான் இருக்கிறாய் என்

யும் கூட உன்னைத் தெரிந்து கொள்ளக் கூடாது. நீ உன் மாளிகையில் பன்றி களைமேய்ப்பவனின் இருப்பிடத்திற் குப் போய் அவனோடு அங்கே இரு. அவன் உன் பன்றிகளைக் காக்கை மலைக்குப் பக்கத்தில்தான் மேய விட்டு வருகிறான். இதற்குள் உன் மகன் தீரமதியை நான் உன் மாளிகை யில் கொண்டு போய்ச் சேர்த்து விடு கிறேன். அவன் உன்னைப் பற்றி விசா ரிக்க ராஜராஜனைக் காணச் சென்றி ருக்கிறான்'' என்றது.



இப்படி கூறிய பின் அத்தேவதை ரூபதரனை குடுகுடு கிழவனாக மாற்றி யது. அவனது உடலில் சுருக்கங்கள் விழுந்திருந்தன. அவனது தலை மயிரோ படியாமல் பரட்டையாக இருந்தது. அவனுக்கு ஒரு கைத்தடியை யும் தோளில் தொங்கவிட ஒரு பையை யும் அது கொடுத்தது. பிறகு காக்கை மலைக்குப் போகும் வழியையும் அது ரூபதரனுக்குக் கூறியது.

ரூபதரனும் தேவதை சொன்ன படி நடப்பதாகக் கூறவே, அது மாயமாய் மறைந்து போயிற்று. அதன் பின் அவன் காடுகளையும் மலைகளையும் கடந்து தன் பன்றிகளை மேய்ப்பவன் இருக்கும் காக்கை மலையை அடைந் தான். ரூபதரனின் வேலையாட்களில் இந்தப் பன்றி மேய்ப்பவன்தான் மிகுந்த எஜமான விசுவாசம் கொண்ட வன். அவன் ஒரு பரந்த வெளியில்தான் இருப்பதற்காக ஒரு வீட்டைக் கட்டிக் கொண்டு பன்றிகளை வைத்திருக்க ஒரு கொட்டகையும் போட்டுக் கொண்டு இருந்து வந்தான்.

அந்த இடத்தைச் சுற்றி கல்லாலான மதில் சுவரை எழுப்பி வீட்டின் பக்கம் ஒருநாவல் மரத்தையும் நட்டு வளர்த்து வந்தான். அவனது பாதுகாப்பில் ஆயிரம் பன்றிகள் இருந்தன. ரூபதர னின் மாளிகையில் இருந்த கயவர்கள் அப்பன்றிகளில் ஒவ்வொன்றாக தின மும் கொண்டு வரச் சொல்லி கொன்று சாப்பிட்டு வந்தார்கள். பன்றி மேய்ப்ப வன் பன்றிகளைக் காவல்காக்க நான்கு வேட்டைநாய்களை வைத்திருந்தான்.

ரூபதரன் அங்கு வந்த போது பன்றி மேய்ப்பவன் தனக்குச் செருப்புகளைத் தைத்துக் கொண்டிருந்தான். ரூப தரனைக் கண்டதும் வேட்டை நாய்கள்



தின்று தீர்த்து வருகிறது. நீ உள்ளேவா. சாவகாசமாகப் பேசலாம். முதலில் நீ சாப்பிட எதாவது கொடுக்கிறேன்'' என்று கூறி அவனைத் தன் குடிசைக் குள் அழைத்துச் சென்றான்.

ரூபதரன் சாப்பிட்ட பின் பன்றி மேய்ப்பவன் தன் எஜமானனின் அருமை பெருமைகளைக் கூறி அவர் ராஜராஜனோடு ட்ராய் நகருக்குப் போனார் என்றும் அதன் பிறகு என்ன ஆனார் என்று தெரியவில்லை என்றும் வருத்தத்தோடு கூறினான். ரூபதரனும் ''நீ உன் எசுமானனைப் பற்றி இவ் வளவு பெருமையாகக் கூறுகிறாயே. அவர் பெயர் என்ன?'' என்று கேட் டான்.

பன்றி மேய்ப்பவனும் ''அவரைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாது. சொன்னாலும் பிரயோஜனம் இல்லை'' என்றான். ரூபதரனும் ''இதோ பார்! நான் ஆரூடம் சொல் கிறேன். அது பொய்க்காது. முற்றிலும் பலிக்கும். உன் எஜமானர் வரும் அமா வாசைக்குள் இங்கு வந்து விடுவார். அவரது எதிரிகளும் அழிந்து விடுவார் கள். நான் கூறுவது பலித்து விட்டால் நீ எனக்கு என்ன பரிசு கொடுப்பாய்?'' என்று கேட்டான்.

பன்றி மேய்ப்பவனும் ''போ. போ இப்படித்தான் யார் யாரோ என்னென் னவோ சொன்னார்கள். எதுவுமே பலிக்கவில்லை. அவர் மட்டும் வந் தால் அவரது மனைவியும் மகனும் எவ்வளவு சந்தோஷப்படுவார்கள்

பலமாகக் குரைக்கச் தொடங்கின. அவன் மீது பாய ஓடி வந்தன. ரூபதரன் தன் கைத்தடியை எறிந்து விட்டுத் தரை மீது சட்டெனப் படுத்துக் கொண்டான். அப்போது பன்றிமேய்ப்பவன் எழுந்து வந்து நாய்களை விரட்டிவிட்டு ரூப தரனிடம் ''கிழவா! ஏன் இப்படி வேட்டை நாய்களின் வாயில் அகப்பட முயன்றாய்? நான் என் எஜமானனைப் பற்றிய கவலையில் இருந்ததால் உன்னை கவனிக்கவில்லை. அவர் தாம் எவ்வளவு நல்லவர்! இப்போது எந்த நாட்டில் எப்படிக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாரோ? இங்கோ அவ ரது மாளிகையில் சோம்பேறி தடியர் களின் ஒரு கூட்டம் இருந்து கொண்டு இந்தப் பன்றிகளை ஒவ்வொன்றாகத்

தெரியுமா?'' என்றான்.

அவர்கள் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். ரூபதரன் தான் யாரென்பதைக் கூறாமல் க்ரீட் தீவில் வசிப்பவன் என்றும் தானும் ட்ராய்ப் போரில்கலந்து கொண்டவன் என்றும் அப்போரில் மாவீரன் ரூபதரனை நேரில் பலமுறை பார்த்தவன் என்றும் கூறினான். பன்றி மேய்ப்பவன் அவர் தாம் தன் எஜமானர் என்று கூறவே ரூபதரனும் ''அவரை அண்மையில் ஒரு தீவில் சந்தித்தேன்'' என்றான்.

இருட்டு வேளைக்குப் பன்றி மேய்ப்பவனின் கீழ் வேலை செய்ப வர்கள் பன்றிகளுடன் வந்தார்கள். அன்று யாவருக்கும் விருந்து சாப்பாடு போடப்பட்டது வெளியே மழை பெய்து கொண்டிருந்தது, ஈரக்காற்று அடித்தது. ரூபதரன் குளிரில் நடுங்க லானான்.

அவன் பன்றி மேய்ப்பவனிடம் ''ஒரு முறை ட்ராய்ப் போரின்போது ட்ராய் கோட்டை மதிலருகே நாங்கள் சிலர் போய் புதர்களின் கீழ் மறைந்து படுத்துக்கொண்டோம். அன்றும் இது போலக் குளிர்காற்று வீசியது. என்னி டம் போர்த்திக் கொள்ளப் போர்வை ஏது? அப்போது நான் ரூபதரனைத் தட்டி எழுப்பி என் கஷ்டத்தைக் கூறி னேன். அப்போது அவர் சிலரிடம். தான் கெட்டகனவு கண்டதாகக் கூறி ஒருவனை ராஜராஜனிடம் அனுப்பி மேலும் சிலரை அழைத்து வரச் சொன்னார். அந்த வீரன் தன் போர் வையை அங்கேயே விட்டு விட்டுச் சென்றான். ரூபதரன் அதை எடுத்து எனக்குக் கொடுக்க, அதைப் போர்த் திக் கொண்டு அன்றிரவு கடும் குளிரி லிருந்து தப்பினேன்'' என்றான்.

பன்றி மேய்ப்பவனும் ''பார்த் தாயா! இதுதான் என் எஜமானரின் குணம்'' என்று கூறி ஒரு போர்வையை அவனிடம் கொடுத்தான் ரூபதரனும் அதைப் போர்த்திக் கொண்டு பன்றி மேய்ப்பவன் காட்டிய படுக்கையில் படுத்துக்கொண்டு அன்றிரவு சுகமாகத் தூங்கினான்.

**(தொடரும்)**



# அம்புலிமாமா செய்திகள்

## படிக்க வேண்டாம், கேளுங்கள்

தற்போதைய விஞ்ஞானக் கண்டு பிடிப்புகளால் பல துறைகளிலும் பலவித முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளன. அச்சுத் துறையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் வியக்கத்தக்கது மிக முக்கியமான புத்தகங்களை மைக்ரோ ஃபில்ம்களில் படமாக்கி பத்திரமாக வைத்துக் கொள்ளுகிறார்கள். தேவைப்படும் போது இவற்றைக் கம்ப்யூட்டர் ஸ்கிரீனில் போட்டுப் படிக்கலாம். புத்தகங்களைப் படிக்கும் காலம் கூட மாறி பாடங்களைப் பாட்டுகள் கேட்பது போலக் கேசட்டுகளில் கேட்கும் காலமும் வந்து விட்டது. சில வானொலி நிலயங்கள் புகழ் பெற்ற நாவல்களை அவற்றை எழுதிய ஆசிரியர்களின் குரல்களில் கூட நம்மைக் கேட்க வைக்கின்றன. அண்மையில் மலையாள எழுத்தாளர் சி. ராதாகிருஷ்ணன் தன் நாவலை ஒலிநாடாவாயிலாக வெளியிட்டுள்ளார். அகில இந்திய வானொலி இசைக் கலைஞர் ஒருவர் இந்த நாவலைக் கூறக் குரல் கொடுத்திருக்கிறார்.

## ஏலத்தில் பதுங்கியிருந்த புத்தகத் திருடன்

இங்கிலாந்தில் சபக்கைச் சார்ந்த டங்கன் ஜேவோன்ஸ் என்ற இளைஞனுக்கு மத சம்பந்தமான நூல்கள் மிகவும் பிடிக்கும். இவற்றைச் சேகரிப்பதிலும் அவன் ஈடுபடலானான். ஆனால் அவனால் எல்லாப் புத்தகங்களையும் பணம் கொடுத்து வாங்க முடியவில்லை. அதனால் அம்மாதிரிப் புத்தகங்களைத் திருடத் தொடங்கினான். முப்பது வருடங்களில் 52,000 புத்தகங்களை அவன் இவ்வாறு சேர்த்து விட்டான். ஆனால் கார்லைல் நகரில் புத்தகம் திருடும் போது பிடிபட்டான். அவனிடமிருந்து கைப்பற்றிய 12,000 புத்தகங்களை போலிசார் ஏலம் போட்டார்கள். அந்த ஏலத்தின் போது இருந்த டங்கன் மட்டும் அதில் கலந்து கொள்ள முடியாமல் பேசாமல் நின்று கொண்டிருக்க வேண்டியதாயிற்று.

## பிறந்த நாள் பரிசு!

அமெரிக்க ஜனாதிபதி பில்க்ளின்டனின் மகள் செல்ஸி. அவளுக்குப் பதினாறு வயது. அவளுக்குப் பிறந்த நாள் பரிசாக மூன்று தனியார் ரேடியோ நிறுவனங்கள் மூன்று மாடல்களில் மூன்று கார்களை அனுப்பின. அப்போது செல்ஸி வீட்டில் இருக்கவில்லை. பள்ளிக்குச் சென்றிருந்தாள். அவள் பள்ளியிலிருந்து வந்ததும் அவளும் அவளது பெற்றோர்களும் மூன்று கார்களையும் ஏற்பதற்கு இல்லை எனப் பணிவுடன் கூறித் திருப்பி அனுப்பிவிட்டார்கள். அன்று மாலை அவளை அவரது பெற்றோர்கள் ஒரு நாடக அரங்கிற்கு அழைத்துப் போய் அங்கு நடந்து கொண்டிருக்கும் விக்டர் ஹ்யூகோவின் 'லே மிசரபிள்' என்ற நாடகத்தைப் பார்க்க வைத்தார்கள். பதினாறு மெழுகு வத்திகள் ஏற்றி வைக்கப் பட்ட கேக்கை ஊதி அணைத்து வெட்டித் தின்காத போதிலும் செல்ஸி அந்நாடகத்தைக் கண்டு மிகவும் மகிழ்ந்து போனாள்!



# அனுபவ அறிவு

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ இந்த பயங்கர நடு நிசியில் இப்படி சிரமப் படுகிறாயாயே, இது யாராவது பண்டிதருக்காகவா? உண்மையில் அந்தப் பண்டிதருக்கு அனுபவ அறிவும் இருந்தாலே உன் முயற்சி பலனை அளிக்கும். இதற்கு உதாரணம் ஞானசேகரன் என்பவனே. அவன் தன்னை மாபெரும் பண்டிதராக எண்ணி இருந்தான். ஆனால் அது தவறு எனப் புரிய வைத்தாள் அவனது மாமன் மகள் மஞ்சுளா. இக்கதையை கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

ஞானசேகரன் சிறுவயது முதலே

## வேதாளம் சொல்லும் கதை



பல நூல்களைப் படித்தவன். அதனால் தான் எல்லாவற்றையும் கற்று மாபெ ரும் பண்டிதராகி விட்டதாக எண்ணிப் பெருமிதம் அடைந்தான். அவன் எல் லாவற்றையும் படித்து விட்டதாக எண் ணியாருடனும் இலக்கிய சம்மந்த மாக வாதம் புரியவும் தயாராக இருந் தான்.

ஒருமுறை அவனது தாய் மாமா மகாலிங்கம் ஞானசேகரனைப் பார்க்க அவனது ஊருக்கு வந்தார். அவரு டைய நோக்கம் தம் மகள் மஞ்சு ளாவை ஞானசேகரனுக்கு மண முடித்து வைப்பதே. ஆனால் ஞான சேகரன் எப்போது பார்த்தாலும் இலக் கியம், இலக்கணம் என்றே பேசிக் கொண்டிருப்பதைக் கண்டு அவன் மனதைத் தன் வழியில் திருப்ப ஒரு திட்டத்தோடு வந்திருந்தார்.

ஞானசேகரன் ஊரிலிருந்து வந்த மாமாவிடம் இலக்கியம் பற்றிப் பேசத் தொடங்கவே அவரும் ''இதோ பார்! நானும் இலக்கியத்தில் ஓரளவு தேர்ச்சி பெற்றிருந்தாலும் உன்னோடு என் னால் வாதம் புரிய முடியாது. நீ என்னு டன் எங்கள் ஊருக்கு வா. அங்கு பண்டி தர் பரமசிவம் என்பவர் இருக்கிறார். அவர் அறிவுக் கடல். அவரிடம் பேசி னால் அவர் கூறும் புது வார்த்தை களுக்கு மற்றவர்களால் சரியான பொருள் கூடக் கூற முடியாது'' என் றார்.

அதைக் கேட்டு ஞானசேகரன் ஆச்சரியப்பட்டான். ஏனெனில் அவன் தன்னை விட அதிகம் படித்தவர் யாரு மே இல்லை என்றும் தனக்குத் தெரிந்த அளவு வேறு யாருக்குமே தெரியாது என்று எண்ணி கர்வப் பட்டுக் கொண் டிருந்தான். எனவே யாரோ பரமசிவம் என்ற மாபெரும் பண்டிதர் இருக்கிறார் என்று கேட்டதும் அவரைக் கண்டு இலக்கிய வாதம் புரிய வேண்டு மெனவே அவன் நினைத்தான்.

ஞானசேகரனோ ''மாமா! எனக்கு எவ்வளவு சொற்கள் தெரியுமோ அவ் வளவு வேறு எந்தப் பண்டிதருக்கும் தெரிந்திருக்க முடியாது. நீங்கள் கூறும் உங்கள் ஊர் பண்டிதர் பரமசிவத்தை நான் நேரில் கண்டு அவரது அறிவு எவ் வளவு என்று அறிய விரும்புகிறேன் அதனால் நான் உங்களோடு உங்கள் ஊருக்கு வரத் தீர்மானித்து விட்டேன்''

என்றான்.

மகாலிங்கமும் மகிழ்ச்சியுடன் ''அப்படியா! சரி, என்னோடு வா. பண டிதர் பரமசிவத்தை உனக்கு அறிமுகம் செய்து வைக்கிறேன். அவர் அறிவுக் கடல்என்பதைமட்டும்நினைவில்வைத் துக் கொள். நீ இதுவரைப் பார்த்துள்ள பண்டிதர்களைப் போல அரைவேக் காடு அல்ல. நிறைகுடம்'' என்றார்.

ஞானசேகரனும் ''இருக்கட்டுமே. என் முன் அவரால் நிற்க முடியாது'' என்று பெருமை பேசி தன் மாமா மகா லிங்கத்துடன் அவரது ஊருக்குச் சென் றான். மகாலிங்கமும் மனதிற்குள்ளே யே ''ஞானசேகரா! உன்னுடன் மஞ்சு ளாவை பழக வைத்து உங்கள் திரு மணத்தை செய்கிறேனா இல்லையா என்று பார்'' என்று கூறிக் கொண்டார்.

மகாலிங்கம்தன் வீட்டை அடைந்த தும் ஞானசேகரனிடம் ''ஞானசேகரா! நீ எப்போது பார்த்தாலும் இலக்கியம் என்று தான் யோசித்துக் கொண்டே இருப்பாய். உன் தேவைகளைப் பற்றி நினைக்கக் கூட மாட்டாய். அதனால் தான் நீ இங்கு இருக்கும் வரை ஒரு ஏற் பாடு செய்ய எண்ணி இருக்கிறேன். உனக்கு என்னவெல்லாம் வேண்டு மோ அந்த வேலைகளை எல்லாம் என் மகள் மஞ்சுளா செய்வாள்'' என்றார். ஞானசேகரனும் ''அது பற்றியெல் லாம் நான் கவலைப் படவில்லை முத லில் அந்தப் பண்டிதர் பரமசிவத்தைப் பார்த்து வாதம் புரிய வேண்டும்'' என் றான்.



மஞ்சுளாவும் ''அத்தான்! அவர் மாபெரும் பண்டிதர். அவரோடு பேசு வது என்றாலே சற்று யோசித்தே பேச வேண்டும் அவர் கூறும் புதிய சொற் கள் பிறருக்கு எளிதில் புரியாமல் கூட இருக்கும்'' என்றாள். ஞானசேகரனோ ''இதைப் பற்றிக் கவலைப்பட வேண் டியது பண்டிதராகிய நான். நீ ஒன்றும் எனக்குச் சொல்ல வேண்டாம் உனக்கு இலக்கியம் பற்றியோ அல்லது இலக் கணம் பற்றியோ எதுவும் தெரியாது. உனக்குத் தெரியாத விஷயத்தில் அநா வசியமாகத் தலையிடாதே'' என்று வெடுக்கென்று கூறினான்.

மகாலிங்கமும் ''சேகரா! அவளு டன் இப்போது ஏன் வீண் விவாதம்! நான் போய் பண்டிதர் பரமசிவம்



வீட்டில் இருக்கிறாரா என்று பார்த்து உன்னைஅவர்சந்திக்கும்நேரத்தையும் அறிந்து கொண்டு வருகிறேன். அதற்குள் மஞ்சுளா நீ குளிக்க ஏற்பாடுகளைக் செய்வாள்'' என்று கூறிவிட்டு சென்றார்.

மஞ்சுளை நல்ல அழகி நன்கு படித்தவள். எல்லா வேலைகளையும் சுறு சுறுப்புடன் செய்பவள். நன்கு பேசுபவள். இப்படிப்பட்டவள் ஞானசேகரனுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கலானாள். ஆனால் ஞானசேகரனோ அவளைப் பற்றிக் கவலைப் படாமல் தன் மாமா எப்போது வருவார்என்றும்எப்போது பண்டிதர்பரம சிவத்தைக் கண்டு எப்படியெல்லாம் வாதம் புரிய வேண்டும் என்றே யோசிக்கலானான்.

மகாலிங்கம் வெளியே போய் விட்டு வந்து ''பரமசிவம் வெளியூர் போயிருக்கிறாராம். வருவதற்கு இரண்டு நாட்களாகுமாம்'' என்று ஞானசேகரனிடம் கூறினார். அது கேட்டு ஞானசேகரன் ''இரண்டு நாட்களாகுமா? அதுவரை நான் என்ன செய்வது?'' என்று கேட்டான். மஞ்சுளாவோ ''ஏன்? நான் இருக்கிறேன். பல விஷயங்கள் பற்றிப் பேசிப் பொழுதைப் போக்கலாம்'' என்றாள்.

ஞானசேகரனோ ''உன்னிடம் பேச என் போன்ற பண்தர்களுக்கு என்ன இருக்கிறது?'' எனவே மஞ்சுளாவும் ''ஏன்? பரமசிவனார் உபயோகிக்கும் புதிய சொற்கள் பற்றிப் பேசலாமே'' என்றாள். ஞானசேகரனோ ''நீயோ எனக்கு எடுபிடி வேலை செய்பவள். எனக்குச் சமமாக பேசக் கூடிய அறிவு உனக்கு ஏது?'' என்று கேட்டான். மஞ்சுளாவும் ''ஆகா! உங்களைப் போன்றவர்களைப் பார்த்துத்தான் 'நரடன்றி கெரட்டவன்' என்ற சொல்லைப் பரம சிவனார் பயன்படுத்தினார்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து சென்றாள்.

ஞானசேகரனுக்கு மஞ்சுளா கூறிய புதிய சொல் புரியவே இல்லை. அவன் அது பற்றி வெகுநேரம் யோசித்தான். அப்போதும் விளங்கவில்லை. அதனால் அவன் மஞ்சுளாவைக் கண்டு ''நீ ஏதோ புதிதாகப் பண்டிதர் பரம சிவம் பயன்படுத்தினார் என்று ஒரு சொல்லைக் கூறினாயே. அதன்

பொருள் என்ன?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட மஞ்சுளா கலகல வென்று சிரித்து ''அத்தான்! அதைப் புரிந்து கொள்ளப் புத்தக அறிவு இருந் தால் மட்டும் போதாது அனுபவ அறி வும் வேண்டும். மாபெரும் பண்டிதர் என்று உங்களை நீங்களே கூறிக் கொள் வதில் பயனில்லை. இது பற்றி விளக்க மாகக் கூற வேண்டுமானால் இவ்வூர் மாடசாமியைப் பற்றிச் சொல்ல வேண்டும். அவனைக் குறிப் பிடவே பரமசிவனார் இந்த சொல்லைப் பயன் படுத்தினார்'' என்றாள்.

அதைக் கேட்ட ஞானசேகரன் விழித்தான். அவனுக்கு அந்த சொல்லே முற்றிலும் புதிதாக இருந் தது. அது வரை அவன் அதைக் கேட் டது கூட இல்லை. அதனால் அவன் அவளிடம் ''நீ என்ன சொன்னாய்? புரி யும் படிச் சொல்'' என்றான். மஞ்சுளா வும் ''நான் சொன்ன சொல்லை நன்கு கவனியுங்கள் நரட்டன்றி என்பதி லிருந்த 'ரட்ட' என்பதை எடுத்து விட் டால் கிடைக்கும் சொல் நன்றி. அது போலக் 'கெரட்டவன்' என்பதில் 'ர'வை எடுத்தால் கெட்டவன் என்ற சொல் கிடைக்கிறது. இவற்றைச் சேர்த் தால் நன்றி கெட்டவன் என்பது கிடைக்கிறது, சரி. இதை ஏன் மாட சாமியைக் குறிக்க பரமசிவனார் பயன் படுத்தினார் என்பதைக் கூறுகிறேன்'' என்று விவரமாகச் சொல்லலானாள்.

''மாடசாமி ஏழை விவசாயி. ஒரு முறை மிக மலிவாக ஒரு வயல்



விலைக்கு வரவே வாங்க அவன் நினைத்தான். ஆனால் அவனிடம் அதற்கான பணம் இருக்கவில்லை. அப்போது முருகையயன் என்பவன் அவனுக்குக் கடன் கொடுத்து உதவவே மாடசாமி அந்த வயலை வாங்கி விட் டான். அதில் ஒரு புதையல் கிடைக் கவே மாடசாமி முருகையனின் கடனையும் தீர்த்துவிட்டான்.

முருகையனின் மகளின் திரு மணம் திடீரென நிச்சயமாகவே அவன் அதனை நடத்த மாடசாமியிடம் கடன் கேட்டான். மாடசாமியோ ''கடன் வாங்கித் கல்யாணம் செய்யாதே. ஏழைகள் தம் சக்திக்குள் எதையும் செய்ய வேண்டும். அகலக் கால் வைக் கக் கூடாது'' என்று கூறிக் கடன்



கொடுக்காமல் முருகைய்யனை அனுப்பி விட்டான்.

ஒருமுறை மாடசாமி வயலில் வேலை செய்து கொண்டிருக்கையில் அவனை ஒரு நல்ல பாம்பு தீண்டி விட்டது. முருகைய்யன்தான் ஓடி அவனைச் சுமந்து கொண்டு வைத்தியரிடம் கொண்டு போய்க் காட்டி அவன் உயிரைக் காப்பாற்றினான், இதற்குச் சில நாட்களுக்குப் பின் முருகைய்யனைப் பாம்பு தீண்டியது. அதைப் பார்த்தும் மாடசாமி அவனுக்கு உதவாமல் தன் வழியே போய் விட்டான். வேறு யாரோ சொல்லித் தான் வைத்தியர் வந்து முருகைய்யனைக் காப்பாற்றினார்.''

மாடசாமி பற்றிய இந்த இரு நிகழ்ச்சிகளை மஞ்சுளா ஞானசேகரனிடம் கூறி ''இப்படிப்பட்டவனுக்குத் தான் பரமசிவனார் அந்தச் சொல்லைப் பயன்படுத்தினார்'' என்று கூறினாள். ஞானசேகரனும் ''அப்படியா?'' எனவே மஞ்சுளாவும் ''நான் இப்படிச் சொன்னால் உங்களுக்குப் புரியாது. நீங்கள் மாடசாமியைக் கண்டால்தான் புரியும்'' என்றாள்.

ஞானசேகரனும் ''நீ சொல்வது வேடிக்கையாகவும் ஆச்சரியம் அளிக்கக் கூடியதாகவும் உள்ளது. அப்படி ஒருவன் இருப்பானா என்ற சந்தேகமும் ஏற்படுகிறது. இப்படிப்பட்டவனை நேரில் பார்க்க வேண்டும்'' என்றான். மஞ்சுளாவும் ''ஆகா! போய்ப் பார்த்து விட்டு வாருங்கள்'' என்றாள்.

ஞானசேகரனும் மாடசாமியைப் பார்த்து வருவதாகக் கூறிச் சென்றான். ஒரு தெருவில் அவன் போனபோது இருவர் சண்டை போட்டுக் கொண்டிருப்பதைக் கண்டான். அவர்களில் ஒருவன் பயில்வான். மற்றவன் ஈர்க்குச்சி போல ஒல்லியாக இருந்தான். பயில்வான் ஒல்லிப்பேர் வழியை அடிக்கப் போனான். அங்கு கூடி இருந்தவர்களில் ஒருவன் கூட அவனைத் தடுக்கவில்லை. அப்போது ஞானசேகரன் குறுக்கிட்டு அவர்களை விலக்கி விட்டான்.

அப்போது பயில்வான் ''இந்த ஒல்லிப் பயலை ஆற்று நீர் அடித்துக் கொண்டு போயிற்று ஊரார் யாரும் இவனைக் காப்பாற்ற முன் வரவில்

லை. நான் ஆற்றில் குதித்து இவனை மரணத்திலிருந்து காப்பாற்றினேன். இது இரண்டு நாட்களுக்கு முன் நடந்தது. இன்று இவனை வழியில் பார்த்தேன். நலமா என்று நான் விசாரித்தேன். இவனோ என்னை யாரென்றே தெரியாது என்று ஒரேயடியாகச்சாதிக்கிறான். இப்படிப்பட்ட நன்றி கெட்டவர்களை நாயை அடிப்பது போல அடித்தால்தான் புத்தி வரும்'' என்றான்.

ஞானசேகரனுக்கு அந்த ஒல்லிப் பேர்வழிதான் மாடசாமி என்று தெரிந்து விட்டது. அவன் பயில்வானைச் சமாதானப்படுத்தி ''இவரைப் பார்த்தால் முற்றும் துறந்த ஞானி போல் தோன்றுகிறது. அதனால்தான் இரண்டு நாட்களுக்கு முன் நடந்தது கூட இவருக்கு நினைவில் இல்லை. உங்கள் பலத்தை ஏன் இவரிடம் காட்டி வீணாக்குகிறீர்கள்? இவரை விட்டு விடுங்கள்'' என்றான்.

பயில்வானும் ஞானசேகரன் சொன்னதால் அந்த ஒல்லிப் பேர்வழியை விட்டு விட்டுத் தன் வழியே சென்றான். அப்போது ஞானசேகரன் அந்த ஒல்லிப் பேர்வழியைப் பார்த்து ''நீதானே மாடசாமி?'' என்று கேட்டான். அவனும் ''இதென்ன கேள்வி? நான் தான் யாரென்று நீ தெரிந்து வைத்திருக்கிறாயே. நீ யாரென்பது எனக்குத் தெரியாது. தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமும் எனக்கு இல்லை'' என்று கூறியவாறே போய் விட்டான்.



ஞானசேகரன் பெருமூச்சு விட்டவாறே தன் வீட்டை அடைந்தான்.

மஞ்சுளா ஞானசேகரனைக் கண்டதும் ''என்ன? நீங்கள் அந்த மாடசாமியைப் பார்த்து விட்டீர்களா?'' என்று கேட்கவே அவனும் ''ஓ! பார்க்கவும் பார்த்தேன். பேசவும் பேசினேன். அவனைக் குறிப்பிடப் பரமசிவனார் பயன்படுத்திய சொல் மிகவும் பொருத்தமானதே. ஆனால் நீ ஆரம்பத்தில் என்ன சொன்னாய்? என் போன்றவர்களைக் குறிக்க இந்தச் சொல் என்றாயே. நான் ஒன்றும் நன்றி கெட்டவனாக இருக்க மாட்டேன்'' என்றான்.

மகாலிங்கமும் ''சபாஷ் நீ ஒன்றும் நன்றி கெட்டவனாக இருக்க மாட்

டாய்தான். உன்தேவைகளை எல்லாம் கவனித்துக் கொண்டு வந்தவள் மஞ்சுளாவே. அவள் செய்த பணியை மறந்து விட மாட்டாயே. அப்படி மறந்தால் நீ மாடசாமியைப் போல நன்றி கெட்டவனே. சரி இது இருக்கட்டும் பரமசிவனார் என்ற பண்டிதரே இல்லை. இவ்வூர் மாடசாமியை வைத்து மஞ்சுளா கற்பனை செய்ததே இது. இனியாவது அனுபவ அறிவு வேண்டுமென உணர்கிறாயா? உனக்கும் மஞ்சுளாவிற்கும் விரைவில் திருமணம்'' என்றார். ஞானசேகரனும் புன்சிரிப்புடன் மஞ்சுளாவைப் பார்த்தான்.

வேதாளம் இக்கதையைக் கூறி மகாப் பண்டிதனென நினைத்த ஞானசேகரானால் ஏன் மஞ்சுளா திரித்துக் கூறிய ஒரு சொல்லைப் புரிந்து கொள்ள முடியவில்லை? நன்றி கெட்டவன் என்ற ஒரு சொல்லைக் கொண்டு மஞ்சுளா அவனைத் திக்கு முக்காட வைத்தாளே! இலக்கியத்தைத் தவிர வேறு எதிலும் நாட்டம் கொள்ளாத ஞானசேகரனின் மனம் எப்படி மாறியது? இக் கேள்விகளுக்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்க நூறாகிவிடும்'' என்றது.

விக்கரமனும் ''மஞ்சுளா ஞானசேகரனுக்கு உலக அனுபவமும் அனுபவ அறிவும் தேவை என்பதை உணர்ந்து கொண்டாள். எனவே ஒரு சொல்லை எடுத்து அதைச் சிதைத்து நன்றி கெட்டவன் யார் என்பதை அவனுக்கும் புரிய வைத்தாள். அவள் அவனுக்காக எல்லா வேலைகளைச் செய்தும் அவன் நன்றி செலுத்தவில்லையே என்று உணர்த்தினாள். ஞானசேகரன் அவளது அறிவையும் குணத்தையும் கண்டும் தான் நன்றி கெட்டவன் எனப் பெயர் பெறாமல் இருக்கவும் மனம் மாறி அவளை மணக்க இசைந்தான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# ஜஞ்ஜீராவிலிருந்து கோவா

கருத்து: **மீராநாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




ஜஞ்ஜீராவிற்குத் தெற்கே சாவித்திரி நதியின் கடை முகத்தில் தேவ்கட் என அழைக்கப்படும் ஹரிஹரேஷ்வர நகரம் உள்ளது. இங்கு கடற்கரையிலுள்ள ஆலயங்களால் இது புனிதத் தலமாகக் கருதப்படுகிறது. இந்த ஆலயங்களில் கால பைரவர் ஆலய லிங்கம் சுயம்புலிங்கமாகக் கருதப்படுகிறது. ஒவ்வொரு ஆண்டிலும் ஒரு குறிப்பிட்ட நாளில் கால பைரவரின் விக்கிரகம் பல்லக்கில் வைத்து அருகிலுள்ள குன்றுகளுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. இவை பிரம்மா, விஷ்ணு, சிவன், பார்வதி என பெயரிடப்பட்டுள்ளன.

ஹரிஹரேஷ்வருக்குத் தெற்கே பான்கோட் எனற ஊர் உள்ளது. பதினெட்டாம் நூற்றாண்டில் இதன் கோட்டை மராட்டிய படைத் தலைவர் கான்ஹோஜீ ஆங்க்ரேயின் முக்கிய தளமாக இருந்தது. 1756ல் மராட்டியர் இதனை ஆங்கிலேயர்களுக்கு கேரியாவுக்கு பதிலாகக் கொடுத்து விட்டார்கள். கேரியாவின் மற்றொரு பெயர் விஜயதுர்க்கம். மேற்கிந்தியாவில் ஆங்கிலேயருக்குக் கிடைத்த முதலாவது இடம் இது தான்.


ஹரிஹரேஷ்வர்

கான்ஹோஜீ ஆங்க்ரே

பான் கோட்டிற்குத் தெற்கேயுள்ள வேலாஸில் தான் புகழ் பெற்ற ராஜ தந்திரி நானாபட்னவிஸ் பிறந்தார்.


நானாபட்னவிஸ்

பரிபடனா அல்லது பாலே பட்னே என்ற பு காலத்து துறைமுகம் பல நூற்றாண்டுகளாக இருந்தது பான் கோட்டிற்குத் தெற்கேயுள்ள இத்துறைமுகம் 14 முதல் 16ம் நூற்றாண்டு வரை தென் கொங் கணத்தில் முக்கியமாக விளங்கி மததியதரைக கடல் நாடுகளுடனும் பாரசீக வளைகுடாப் பகுதி யோடும் வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்தது. பின்னர் இதன் பெயர் தாபோல என்றாகியது. தாபீயா என்ற கடவுளின் பெயரில் அமைந்த இவ் வூரில் அழகிய வேலைப் பாடமைந்த மசூதி ஒன்று உள்ளது கி.பி. 550-578ல் கட்டப்பட்ட பாதாள சந்திர காப்பு ஆலயமும் இங்கு உள்ளது.

இந்த தாபோலில்தான் தற்போது அமெரிக்க நிறுவனமான என்ரான் ஒரு பெரிய மின் நிலயத்தை அமைக்க இருக்கிறது. இதனால் இம்மாநிலத்திற்கு நிறைய மின் சக்தி கிடைக்கும்.



அல்போன்ஸோ மாம்பழம்

கொங்கணக் கடற்கரையில் மேலும் தெற்கே அழகிய கணபதிபுலே என்ற ஊர் உள்ளது. இங்கு முந்திரி, தேங்காய், மாம்பழம் நிறைய விளைகிறது. சவுக்கு மரங்களும், நிறைய உள்ளன. இங்குள்ள விநாயகர் கோவில் மிகப் புகழ் பெற்றது. இங்குள்ள கணபதி விக்கிரகம் 400 ஆண்டுகளுக்கு முன் ஒரு குன்றில் கண்டெடுக்கபபட்டதாம்



பால கங்காதர திலகர்

இங்கு அங்கார சதுர்த்தியன்று ஆயிரக்கணக்கில் மக்கள் கூடி வெல்லக் கொழுக் கட்டையை அர்ப்பணிக்கிறார்கள். இந்த விழா ஒருநாள் முழுவதும் நடைபெறுகிறது. அன்று பலர் உண்ணா நோன்பும் மேற் கொள்கிறார்கள்.

இங்கும் கொங்கணத்திலும் கோகன் என்ற ஒருவகைப் புளிப்பும் இனிப்பும் கலந்த பழம் கிடைக்கிறது. இப்பழத்திலிருந்து கோகன் சர்பத் தயாரிக்கிறார்கள். சாறு பிழிந்து எடுத்த பின் இதன் சக்கையோடு உப்பைக் கலந்து பத்து நாட்கள் உலர வைத்து ரசம், கூட்டு போன்றவற்றிற்கு புளியைப் போல உபயோகிக்கிறார்கள்.

இந்தியாவில எங்கும் மாம்பழங்கள் கிடைத்தாலும் ரத்னகிரியின் அல்போன்ஸோ ரகத்திற்கு ஈடாகாது. ரத்னகிரி ஒரு சிறு துறைமுகம், இங்கு சிறப்பானது லோக மான்ய திலகர் நினைவாலயம் இந்திய சுதந்திரப் போராட்ட முன்னணி வீரர் பாலகங்காதர திலகர் இந்த வீட்டில்தான் 1856 ஜுலை 23ல் பிறந்தார்.

ரத்னகிரிக்குத் தெற்கே பலமான விஜய துர்க்கக் கோட்டை உள்ளது. மராட்டியர் கடற்படைத்தளமாக இது சிந்து துர்க்கத்துடன சேர்ந்து செயல்பட்டது. இதன முந்தையப் பெயர் கேரியா. இப்பெயரை சிவாஜிதான் மாற்றி விஜய துர்க்கம் எனறு வைத்தார். இதன் மேற்குச் சுவரைக் கடல் அரித்து விட்டாலும் மற்ற பகுதிகள் இன்னமும் பலமாகவே உள்ளன.



விஜயதுர்க்கக் கோட்டை.



வடே சாகுடி

மேலும் தெற்கில் ஒரு காலத்தில் வணிகத் துறை முகமாக இருந்த மால்வான் உள்ளது. இது தரமான உணவிற்குப் பெயர் பெற்றது. மால்வான் உணவில் 'சோல் கடி' மிகச் சிறந்தது. இது கோகனால் தயாரிக்கப் படுகிறது. இதில் தேங்காய் கலந்த மீனும் பரிமாறப்படு கிறது. மிகவும் பெயர் பெற்ற 'வடே சாகுடி' அரிசிமா பூரியும் மாமிசமும் உள்ளதாம்.

கடற்கரையிலிருந்து ஒரு கிலோ மீட்டர் தூரத்தில் சிந்து துர்க்கம் உள்ளது. இதை சிவாஜியே தன் கைப்படக் கட்டினாராம். சிவாஜியின் கை, கால் தடயங்கள் பதிந்த காரைக் கற்கள் இதன் அருகிலுள்ள அந்த மராட்டிய வீரரின் சிலை கொண்ட கோவிலில் உள்ளன நாட்டிலேயே சிவாஜிக்கு உள்ள ஒரே கோவில் இதுதான். இங்குள்ள சிலை கருங்கல்லால் ஆனது. சில விசேஷ நாட்களில் இதன் தலையில் தங்கக் கிரீடம் அணிவிக்கப்படுகிறது.

மராட்டியக் கடற்கரையின் முடிவில் வெங்குர்லா உள்ளது. இது கோவாவிற்கு அருகில் உள்ளது. இங்கிருந்து முன்பு தேங்காய், கயிறு, முந்திரி போன்றவை மற்ற இடங்களுக்கு அனுப்பட்டதாம். 1664லிருந்து 1812 வரை இதனைப் பலமுறை பல கொள்ளைக்காரர்கள் கொள்ளை அடித்திருந்தார்கள். இருமுறை மராட்டியர்களும் முகலாயர்களும் இதனை எரித்திருக்கிறார்கள்.

வெங்குர்லாவில் நீண்ட மணல் பகுதிகள் அதிகம். இங்கு முந்திரி, தென்னை, பலா, மா முதலியவை நன்கு வளர்கின்றன. இங்கு ஸ்ரீதேவி சடேரி கோவிலும் ராமேஷ்வர ஆலயமும் பெயர் போனவை.



சிவாஜி சிலை



சிந்துதுர்க்கக் கோட்டை



# அவரவர் தகுதி!

மலயகிரியின் மன்னன் மகாசேனன் அவனது அரசவையில் வெவ்வேறு துறைகளில் சிறப்பு மிக்கவர்கள் இருந்தனர். மருத்துவத் துறையில் சிறந்த மாதவாச்சாரியும் கவிஞர் திலகமாக விளங்கிய வித்தியா நாதரும் அவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள். இருவரும் தம் துறைகளில் தமக்கு இணை யாருமே இல்லையெனப் பெயர் பெற்றவர்கள்.

ஒருமுறை அயல்நாட்டிலிருந்து சில கவிஞர்கள் மலயகிரியின் தலைநகருக்கு வந்திருந்தார்கள். அப்போது வித்தியாநாதர் உடல் நலம் குன்றி இருந்ததால் அக்கவிஞர்கள் சபைக்கு வந்தபோது அரசசபைக்கு வர முடியாமல் போயிற்று. மன்னனுக்குக் கவிதை என்றால் மிகவும் பிடிக்கும். இப்படிப்பட்ட சமயத்தில் வித்தியாநாதர் சபையில் இல்லையே என்று மிகவும் வருந்தினான்.

அயல்நாட்டிலிருந்து வந்த கவிஞர்கள் ''அரசே! நாங்கள் வித்தியாநாதரைக் கண்டு அவரது புலமையைக் காணலாம் என்று ஆசையுடன் வந்தோம். இங்கு வந்த பிறகு அவர் உடல் நலம் குன்றி இருப்பதாக எங்களுக்குத் தெரிய வந்தது. அவரது சீடர்கள் இருப்பார்களே. அவர்களது புலமையை அறிய எங்களுக்கு வாய்ப்பு அளியுங்கள்'' என்று கோரினார்கள்.

மன்னனும் வித்தியாநாதரின் சில சீடர்களை அயல் நாட்டிலிருந்து வந்த கவிஞர்களுடன் வாதம் புரிய ஏற்பாடு செய்தான். அதில் அயல்நாட்டுக் கவிஞர்கள் எளிதில் சீடர்களைத் தோற்கடித்தார்கள். பிறகு அவர்கள் இன்னும் வேறு யாராவது கவிஞர் தம்மோடு வாதம் புரிய இருக்கிறார்களா என்று கேட்டார்கள்.

மன்னன் என்ன பதிலைச் சொல்வது எனச் சற்று யோசிக்கையில் அர

—எஸ். சோபினி—



சாங்க வைத்தியர் மாதவாச்சாரி அவரிடம் ''அரசே! தாங்கள் அனுமதி அளித்தால் இந்தக் கவிஞர்களுடன் நான் வாதம் புரிகிறேன்'' என்றார். அது கேட்டு மன்னன் ஆச்சரியப்பட்டாலும் அவரது வேண்டுகோளை ஏற்றான். மாதவாச்சாரியும் அக்கவிஞர்களுடன் வாதம் புரிந்து அவர்களை வென்றார். அக்கவிஞர்களும் அவரது புலமையைப் பாராட்டினார்கள்.

மன்னன் அயல்நாட்டுக் கவிஞர்களுக்கும் மாதவாச்சாரிக்கும் ஏராளமான பரிசுகளை அளித்தான். கவிஞர்கள் சென்ற பின் அவன் மாதவாச்சாரியிடம் ''தாங்கள் இலக்கியத்துறையில் மாபெரும் மேதை என்பது இன்றுதான் தெரிந்தது'' என்றான். மாதவாச்சாரியும் ''வைத்தியம் செய்யும் நேரம் போக மற்ற நேரத்தில் நான் இலக்கிய நூல்களை ஆழ்ந்து படித்து வருவதே இதற்குக் காரணம்'' என்றார்.

மன்னனும் ''நீங்கள் இலக்கியத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டு சிறந்த மேதையாக விளங்குவதால் நீங்கள் வைத்தியத் தொழிலை விட்டு விட்டு இலக்கியப் பணியில் ஈடுபடுங்கள்'' என்றான். அவரும் அதனை ஏற்றுக் கொண்டார்.

கொஞ்ச காலத்திற்குப் பின் மன்னனின் முதுகில் ராஜ பிளவை தோன்றியது. அப்போது மாதவாச்சாரி அண்டை நாட்டில் நடந்து கொண்டிருந்த ஒரு இலக்கிய மாநாட்டில் கலந்து கொள்ளப் போயிருந்தார். மாதவாச்சாரியின் வைத்திய சீடர்கள் எவ்வளவு முயன்றும் மன்னனது ராஜ பிளவையைப் போக்க முடியவில்லை.

மன்னன் முதுகு வலியால் துடித்துக் கொண்டிருந்ததைக் கண்ட ஆஸ்தானப் பண்டிதர் வித்தியாநாதர் அவனிடம் ''அரசே! எனக்கு வைத்தியத்திலும் நல்ல தேர்ச்சி உண்டு. தாங்கள் அனுமதித்தால் தங்கள் ராஜபிளவையை மருந்து வைத்துக் கட்டிப் போக்கி விடுவேன்'' என்றார். மன்னனும் ''சரி. எப்படியாவது என் வலி போனால் போதும்'' என்று கூறி மருந்து வைத்துக் கட்டச் சம்மதம் அளித்தான்.

வித்தியாநாதரும் தம் வீட்டிற்குப் போய்த்தாம் கொல்லைப் புறத்தில் வளர்த்து வந்த மருந்துச் செடிகளில்

ஒன்றைவேருடன்பிடுங்கி எடுத்து வந் தார். அதை நன்கு அரைத்து அதனை மன்னனின் ராஜபிளவையின் மீது வைத்துக் கட்டுப் போட்டார். சற்று நேரத்தில் மன்னனின் முதுகு வலி போய் விட்டது. அது மட்டுமல்ல, ராஜபிளவை வற்றி இருந்த இடம் தெரி யாமல் மறைந்து போயிற்று.

மன்னன் வித்தியாநாதரைப் பாராட்டி ''நாங்கள் இலக்கியத்துறை யில் தான் சிறந்தவர் என்று எண்ணி இருந்தேன். இன்றுதான் தாங்கள் வைத்தியத்திலும் பெரும் நிபுணர் என்று எனக்குத் தெரிந்தது. நீங்கள் இதனை எப்போது கற்றீர்கள்?'' என்று கேட்டான். வித்தியாநாதரும் ''ஓழிந்த வேளைகளில் மருத்துவ நூல்களைப் படித்துப் மூலிகைகளை என் வீட்டின் பின்புறம் வளர்த்தும் அவை பற்றி ஆராய்ந்தும் வருகிறேன். அதனால் எனக்கு இத்துறையில் மிகுந்த ஈடு பாடு'' என்றார்.

அப்போது மன்னன் ''நீங்கள் இனி மேல் இலக்கியப் பணியை விட்டு விட்டு வைத்தியத் தொழிலை மேற் கொள்ளுங்கள்'' எனவே வித்தியாநாத ரும் மன்னரின் சொற்படியே நடக்க லானார்.

சில நாட்கள் கழிந்தன. சில இளம் கவிஞர்கள் மலயகிரி மன்னனின் தர் பாருக்கு வந்தார்கள். அவர்களோடு வாதம் புரிய மாதவாச்சாரிதான் நிய மிக்கப்பட்டார். ஆனால் அக்கவிஞர் களிடம் அவர் தோற்றார். அப்போது வித்தியாநாதர் எழுந்து அக்கவிஞர்களு டன் வாதம் புரிந்து அவர்களைத்



தோற்கடித்துத்தலை குனிய வைத்தார். இதைக் கண்ட மன்னன் ஆச்சரியம் அடைந்தான்.

இதற்கு ஒரு வாரத்திற்குப் பின் மன்னனின் நான்கு வயது மகனுக்குப் கடும் ஜுரம் கண்டது. மன்னன் வித்தியாநாதரை அழைத்து அவனுக்கு சிகிச்சை அளிக்கச் சொன்னான். அவரும் பல மருந்துகளை மாற்றி மாற்றிக் கொடுத்துப் பார்த்தார். மூன்று நாட்களாகியும் மன்னனின் மகன் குணமடையவில்லை.

அது பற்றிக் கேள்விப்பட்ட மாதவாச்சாரி அந்தப்புரத்திற்குப் போய் அரசகுமாரனைப் பார்த்தார். உடனே அவர் தன் மருந்துப் பெட்டியிலிருந்து ஒரு குளிகையை எடுத்து அவன் வாயில் போட்டு விழுங்க வைத்தார். அன்று மாலைக்குள் அரசகுமாரனின் ஜுரம் குறைந்து எப்போதைய நிலைக்கு அவன் வந்து விட்டான். இதைக்கண்டு மன்னன் ஆச்சரியப்பட்டான்.

மன்னன் தன் அமைச்சரிடம் அந்த இருவரின் திறமைகள் பற்றிக் கூறி அவர்கள் ஏன் தக்க சமயங்களில் தம் திறமைகளைக் காட்ட முடியாமல் போனார்கள்?'' என்று கேட்டான்.

அமைச்சரும் ''மாதவாச்சாரியின் தொழில் வைத்தியம் வித்தியாநாதரின் தொழில் கவிதை படைப்பது. பொழுதுபோக்க ஈடுபடும் போக்கு இருவரது. ஒருவன் தன் தொழிலில் சிறந்து விளங்குவதைப் போலத்தான் ஈடுபடும் மற்ற துறையில் சிறந்து விளங்கி விட முடியாது. இதற்கு எடுத்துக் காட்டாக உள்ளவர்களே மாதவாச்சாரியும் வித்தியாநாதரும்'' என்றார்.

அப்போதுதான் மன்னனுக்குத் தான் தவறாக அவர்களிருவரது திறமைகளை எடை போட்டது தெரிந்தது. அவன் அவர்கள் இருவரையும் அழைத்து ''நீங்கள் முன் போலவே உங்கள் தொழில்களைச் செய்யுங்கள். நீங்கள் ஈடுபடும் மற்ற துறையை சமய சந்தர்ப்பத்திற்கேற்பப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்'' என்றான்.





# கிராமக் கணக்கு

பசுபதி வயதாகி விட்ட காரணத்தால் தான் பார்த்து வந்த கிராமக் கணக்குப் பிள்ளை வேலையைத் தன் மகன் மணிக்கு வாங்கிக் கொடுத்தார். அவர் தன் மகனிடம் ''கிராமக் கணக்கை எழுதுவது எளிதல்ல. மேலும் நாம் மேல் வரும்படியில் தான் வாழ்க்கை நடத்த வேண்டும். இதற்கு நமக்கு உதவுபவர்கள் சிறு ஏழை விவசாயிகளே. அவர்கள் தம் வேலைகளுக்காகச் சில்லரை கொடுப்பார்கள். அதை விட்டு விடக் கூடாது. பணக்கார விவசாயிகளைப் பகைத்துக் கொள்ளவும் கூடாது. அவர்களுக்கு நாம் செய்யும் வேலைகளுக்கு அவர்களாகவே பணம் கொடுப்பார்கள். இதை நினைவில் வைத்துக் கொண்டு வேலையைப் பார்'' என்று அறிவுரை கூறினார்.

மணியும் அவ்வாறே நடப்பதாகக் கூறினான். சில நாட்களாயின. ஒரு நாள் பெரியண்ணன் என்ற விவசாயி புதிய கணக்குப் பிள்ளையான மணியைக் காண வந்தான். அவன் தன் நிலத்தை வேறொருவனுக்கு விற்கப் போவதையும் அதற்காகத்தான் அரசாங்கத்திற்கு செலுத்த வேண்டிய வரிகளெல்லாம் செலுத்தி விட்டதற்கான சான்றிதழ்கள் வேண்டுமென்று அவன் மணியிடம் கேட்டான்.

மணியும் அவனது வரிக்கணக்கைப் பார்த்தான். நிலவரி செலுத்தாதோர் பட்டியலில் அவனது பெயர் இடம் பெற்றிருந் தது. அதுவும் ஐந்து வருட வரி பாக்கி என அதில் குறிக்கப்பட்டிருந்தது. அதைக் கண்டு மணி திடுக்கிட்டான். ஏனெனில் பெரியண்ணன் வருடா வருடம் வரி செலுத்தி ரசீது பெற்றது ரசீதுக் கட்டைகளிலிருந்து தெரிந்தது. ஆனால் வரி செலுத்தாதோர் பட்டிய லில் எப்படி இடம் பெற்றது?

—காரை. குருமூர்த்தி—



டது போலக்காட்டப்படுகிறது. அநேகமாக ஏழை விவசாயிகள் செலுத்திய வரிப் பணமும் பணக் கார விவசாயிகள் கட்டாமல் இருக்கும் வரிப்பணமும் கிட்டத்தட்ட சமமாகத்தான் இருக்கும். பணக்கார விவசாயிகள் தாம் அரசாங்கக் கெடுபிடிகளிட மிருந்து தப்ப் எவ்வளவு பணமும் செலவு செய்வார்கள். அதனால்தான் பட்டியலில் வரி செலுத்தியவர்களாகக்காண்பிக்கப்படுகிறார்கள். வரி செலுத்திய ஏழை விவசாயிகள் ரசீதுகள் பெற்றாலும் வரி செலுத்தாதவர்களின் பட்டியலில் இடம்பெறுவதற்கு இதுவே காரணம். இதனால் மேலதிகாரிகளின் நடவடிக்கைளிலிருந்தும் தப்ப முடி யும். ஏழை விவசாயிகள் மீது அவர்கள் நடவடிக்கைகள் எடுக்கும் போது நாம் அவர்கள் ஏழைகள் வரியைச் செலுத்திவிடுவார்கள் என்று கூறி சமாளித்து விடுவோம். இதுதான் கிராமக் கணக்குப் பிள்ளைகளில் பலர் கடைப்பிடிக்கும் வ்ழி'' என்றார்.

ஒன்றும் புரியாமல் மணி அவ்விஷயம் பற்றித் தன் தந்தையிடம் கேட்டான். பசுபதியும் சிரித்துக் கொண்டே ''கணக்குப்பிள்ளை கணக்கு வைக்கும் முறை இதுதான். இந்தப் பெரியண்ணன் மட்டுமல்ல இவனைப் போலப் பல சிறு விவசாயிகளின் பெயர்கள் வரி செலுத்தாதோர் பட்டியலில் இடம் பெற்றிருக்கும். பணக்கார விவசாயிகள் சரியாக வரி செலுத்தவதில்லை, ஏழை விவசாயிகள்தான் பயந்து ஒழுங்காக வரி செலுத்துகிறார்கள். எனவே ரசீது மட்டும் அவர்களுக்கு ஒழுங்காக கொடுக்கப்படுகிறது. இவர்கள் செலுத்தும் பணத்தை வரி செலுத்தியவர்கள் பட்டியலைத் தயாரிக்கும் போது பணக்கார விவசாயிகள் செலுத்திவிட்

மணிக்கு இந்த மாதிரி செய்வது பெரும் மோசம் என்பது புரிந்தது. அதனால் முழுவதுமாக வரி செலுத்தி இருந்த பெரியண்ணனின் பெயரை வரி செலுத்தாதவர்கள் பட்டியிலிருந்து எடுத்து விட்டு அவன் கோரிய சான்றிதழையும் கொடுத்தான். அதற்குப் பெரியண்ணன் கொடுத்த மாமூலையும் அவன் வாங்கிக் கொண்டு ''எங்களுக்குப் போதிய ஊதியம் கிடைத்தால் உங்களைப் போன்ற விவசாயி

களிடமிருந்து ஏன் மாமூல் வாங்கப் போகிறோம்'' என்று மனம் நொந்த வாறே கூறினான்.

பெரியண்ணானும் அவன் நிலத்தை வாங்கப் போகிறவனும் மணிக்கு நன்றி செலுத்திவிட்டுச் சென்றனர். மணியும் வரி செலுத்தா தோர் பட்டியலில் பெரியண்ணனின் பெயருக்கு பதிலாகக் காளியண்ண னின் பெயரைச் சேர்த்து விட்டான்.

இரண்டு வருடங்கள் கழிந்தன. மணிதன்தகப்பனார்கூறிவந்தபடியே கிராமக்கணக்குகளை எழுதி வந்தான். அவனது தந்தை இறந்து போகவே அவன் அவரது ஈமச் சடங்குகளை முடித்துவிட்டு அஸ்தியை எடுத்துக் கொண்டு கங்கையில் கரைக்க காசிக் குக் கிளம்பினான். தான் திரும்பி வர ஒரு மாதக்காலம் பிடிக்கும் என்பதால் அவன் தன் வேலையை கவனித்துக் கொள்ள தன் உறவினனான துரைசாமி யிடம் கொடுத்துப் பார்த்து வரும்படிக் கூறி விட்டுச் சென்றான்.

துரைசாமி நல்லவனல்ல. அவன் அந்தக் கணக்குப் பிள்ளை வேலை யைத் தானே நிரந்தரமாக பார்த்து வர வேண்டுமென விரும்பினான். அத னால் கிராமத்துப் பணக்கார விவ சாயிகளைக் கண்டு வரி செலுத்தா தோர்பட்டியல்தயாரிப்பு பற்றி அவன் கூறி ''இந்தக் கணக்கின்படி நீங்கள் யாருமே வரி செலுத்தத் தேவை யில்லை. ஏழை விவசாயிகள் கட்டிய வரிக்கு ரசீதுகள் கொடுக்கப்பட்டா லும் நீங்கள் வரிகட்டி விட்டது போல எழுதப்பட்டிருக்கிறது. இதற்கான



பொறுப்பை மணிதான் ஏற்க வேண்டும். நீங்கள் மட்டும் கொஞ்சம் என் பக்கம் இருந்தால் உங்களுக்கு நீங்கள் செலுத்த வேண்டிய வரிப் பணம் மிஞ்சுவதோடு இந்தக் கணக்குப் பிள்ளை வேலையும் எனக்கே கிடைக்கும். அதன் பிறகு நான் உங்களுக்கு எல்லா விதத்திலும் உதவுவேன்'' என்றான்.

ஒரு மாதம் கழித்து மணி தன் ஊருக்கு வந்தான். அப்போது விவசாயிகளிடையே ஏதோ மாற்றம் ஏற்பட்டிருப்பதை அவன் கவனித்தான். வரிகட்டியவர்கள் தம் ரசீதுகளைக் கொண்டு வந்து காட்ட வேண்டும் என்று துரைசாமி தண்டோரப் போட்டு அறிவித்திருந்ததே அதற்குக் காரணம்.

ஏழை விவசாயிகளில் பலர் தாம் வரி கட்டியதற்க்கான ரசீதுகளைக் காட்டித் தம் பெயர்கள் வரி செலுத்தாதோர் பட்டியலில் இருந்தது கண்டு ஆத்திரப்பட்டு மணியைத் திட்டினார்கள். மணி அவர்களைச் சமாதானப் படுத்தி ''யாரோ ஏதோ சொல்லி உங்கள், பெயர்களை வரி செலுத்தாதவர்கள் பட்டியலிலிருந்து நீக்கி விடப் போகிறார்கள் என்று மகிழ்ந்து போகாதீர்கள். நீங்கள் உங்கள் வயல்களில் கரும்பு பயிரிட்டிருக்கிறீர்கள். ஆனால் வாழை பயிரிட்டதாகக் கூறி அரசாங்க மானியமும் வாங்கி இருக்கிறீர்கள். இதெல்லாம் வெளிப்பட்டால் என் உத்தியோகம் போகலாம். ஆனால் நீங்கள் தாம் அரசாங்கத்தின் கடும் நடவடிக்கைகளுக்கு ஆளாகிக் கஷ்டப் படுவீர்கள்'' என்றான்.

அது கேட்டு எல்லா விவசாயிகளும் கணக்குப் பிள்ளை எப்படி வேண்டுமானாலும் கணக்கு எழுதிக் கொள்ளட்டும், நம்மை வம்பில் மாட்டி விடாது இருக்கிறாரே. அது போதும் என்று மணியைப் புகழ்ந்தார்கள்.

மணி அப்போதைக்குப் பெரும் ஆபத்திலிருந்து தப்பி விட்டான். ஆனால் அதற்குப்பின் கணக்கு எழுதும் போது உள்ளத்தை உள்ளபடி எழுதி அவன் எல்லோரிடமும் நல்ல பெயர் பெற்றான்.






கிருஷ்ணர் ஆட்சியை வசுதேவரிடம் ஒப்படைத்து விட்டு துவாரகையிலிருந்து முத்துக்கள், ரத்தினம் போன்ற விலையுயர்ந்த பொருள்களை எடுத்துக் கொண்டு ரதத்தில் கிளம்பி இந்திரப்பிரஸ்தத்தை அடைந்தார்.

தருமரும் கிருஷ்ணரிடம் ''ராஜசூய யாகம் செய்ய தங்களது உதவி தேவை. எனவே எனக்குப் பக்க பலமாக இருந்து இந்த யாகம் செய்ய எனக்கு அனுமதி அளிக்க வேண்டும்'' என்று வேண்டினார். கிருஷ்ணரும் ''தருமா! நீ யாகத்தைச் செய். மற்ற வேலைகளை நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்றார்.

தருமரும் சகாதேவனை அழைத்து யாகத்தை ஆரம்பிக்க எல்லா ஏற்பாடுகளையும் செய்யச் சொன்னார். நகுலனை ஹஸ்தினாபுரத்திற்கு அனுப்பி பீஷ்மர், துரோணர், விதுரர் முதலியவர்களை அழைத்து வரச் சொன்னார்.

சகாதேவனும் யாகத்தைச் செய்ய எல்லா ஏற்பாடுகளையும் செவ்வனே செய்து முடித்தான். நகுலன் ஹஸ்தினாபுரத்திற்குப் போய்க் கௌரவப் பிரமுகர்களை அழைத்து வந்தான். தருமர் அவர்களிடம் ராஜசூய யாகம் பற்றி விவரம் அளித்தார். கிருபாசாரியாரிடம் தான தர்மங்கள் நடப்பதை மேற்பார்வையிட வேண்டிக் கொண்டார். உணவு வசதிகளைச் செய்ய துச்சாதனனையும், அந்தணர்களுக்கு மரியாதை செய்ய அஸ்வத்தாமனையும், அரசர்களை கவனித்துக் கொள்ள சஞ்சயனையும், பரிசுகளையும் காணிக்கை

—சிசுபாலனின் அழிவு—



களையும் வாங்கி வைக்க துரியோதனனையும், எல்லாம் சரிவர நடக்கிறதா என்று பார்த்துக் கொள்ள பீஷ்மரையும், துரோணரையும் அமர்த்தி விட்டுதருமர்யாகம் செய்யத் தொடங்கினார்.

வந்தவர்கள் யாவரும் ராஜசூய யாகத்தை மட்டுமல்லாமல் மயன் நிர்மாணித்த மாளிகையையும் காண வந்தார்கள். தருமருக்கு ஏராளமான பரிசுகளும் காணிக்கைகளும் வந்து குவிந்து கொண்டிருந்தன. தானதர்மங்கள் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தன. யாகமும் நன்கு நடைபெற்றது.

அப்போது பீஷ்மர் தருமரிடம் ''இப்போது நீ எல்லா நற்குணங்களும் பொருந்திய ஒரு உத்தமரை சபையில் மரியாதை செய்ய வேண்டும். இதற்கு ஏற்றவர் கிருஷ்ணரே. வேறு யாருக்கும் அத்தகுதி இல்லை. எனவே அவருக்கு சபையில் முதல் மரியாதை செய்'' எனக் கூறினார். தருமரும் பீஷ்மர் கூறியதைக் கட்டளையாக ஏற்று சகாதேவனை அழைத்து முதல் மரியாதைக்கான தாம்பூலத்தைக் கிருஷ்ணருக்குக் கொடுக்கும்படிக் கூறினார். சகாதேவனும் கிருஷ்ணருக்கு முதல் தாம்பூலம் கொடுக்கவே, அதை அவரும் ஏற்றார்.

அப்போது சிசுபாலன் எழுந்து தருமரிடம் ''இந்தக் கிருஷ்ணனுக்கா முதல் தாம்பூலம்? இவ்வளவு மாபெரும் மன்னர்கள் இச்சபையில் இருக்கும் போது இந்த இடைப் பயலுக்கா முதல் மரியாதை? இவன் வயதில் முதிர்ந்தவனா அல்லது குருசிரேஷ்டனா? பெரிய அறிவாளியா? இவனுக்குப் போய் பீஷ்மர் சொன்னார் என்று முதல் மரியாதை செய்தாயே! பீஷ்மருக்குத்தான் மதி எங்கே போயிற்று? கிருஷ்ணனை விட மற்ற மன்னர்கள் மட்டமா? நீ நியாயம் தவறாதவன். நேர்மையாக நடப்பவன் என்றெல்லாம் நினைத்துத்தானே உனக்கு ஆதரவு அளித்தோம். எங்கள் நம்பிக்கையை வீணாக்கி விட்டாய்'' என்று கூறினான்.

பிறகு அவன் கிருஷ்ணரைப் பார்த்து ''இந்தப் பாண்டவர்கள் உனக்கு பயந்து முதல் தாம்பூலத்தைக் கொடுத்தால் நீ அதை ஏற்பதா? நீ க்ஷத்

திரியனா? இல்லையே. ஒரு இடையன். மாடு மேய்ப்பவன். உனக்கு மரியாதை அளிக்கும் இந்த சபையில் இருப்பது அவமானம்'' எனக் கூறி சபையை விட்டுப் போக முயன்றான்.

அப்போது தருமர் அவனைத் தடுத்து ''சிசுபாலா! போகாதே! நீ இப்படியெல்லாம் பீஷ்மரையும் கிருஷ்ணனையும் பற்றிக் கூறியதெல்லாம் முறையல்ல. பீஷ்மர் உன்னை விட எல்லாவற்றையும் நன்கு அறிந்தவர். அவர் கிருஷ்ணரைப் பற்றி எல்லாம் தெரிந்தவர். இந்த சபையில் உன்னை விடப் பெரியவர்கள் இருக்கிறார்கள். அவர்களில் யாருமே கிருஷ்ணருக்கு முதல் மரியாதை செய்ததை ஆட்சேபிக்கவில்லை. நீ ஏன் இப்படிப் பேசுகிறாய்?'' என்று கூறி அவனைச் சமாதானப்படுத்த முயன்றார்.

அப்போது பீஷ்மர் தருமரிடம் ''இந்த சிசுபாலனை நீ ஏன் சமாதானப் படுத்துகிறாய்? அவன் அழிவை அவனே தேடிக் கொள்ள முயல்கிறான்'' என்றார். பிறகு அவர் சபையோரிடம் ''இந்த சிசுபாலன் அறிவற்றவன். இவனால் என்ன செய்ய முடியுமோ அதைச் செய்யட்டும்'' என்றார். அப்போது சகாதேவன் ''கிருஷ்ணரைப் பழித்துக் கூறும் இவனை என் காலடியில் போட்டு மிதிப்பேன்'' என்று கூறி சிசுபாலனை உதைக்கக் காலைத் தூக்கினான்.

சபையில் இருந்த யாரும் சகாதேவனைத் தடுக்க முயலவில்லை. அப்போது சிசுபாலனின் சேனாதிபதி சுநீதன் என்பவன் எழுந்து ''மன்னர்





களே! இந்தப் பாண்டவர்களும் யாத வர்களும் நம்மை அவமானப்படுத்தி விட்டார்கள். எனவே இவர்களின் கொட்டத்தை அடக்க வேண்டும். எழுந்து வாருங்கள்'' என்று கர்ஜித் தான். சிசுபாலனும் ''அதுதான் சரி'' என்று ஆர்ப்பரித்தான். இதைக் கண்ட தருமர் பயந்து பீஷ்மரிடம் ''பிதாம கரே! இவன் இப்படி செய்து யாகத்தை முழுமையடைய விடாமல் செய் கிறானே! என்ன செய்வது?'' 'என்று கூறிக் கவலைப்பட்டார்.

பீஷ்மரோ ''தருமா! கிருஷ்ணர் உனக்குத்துணையாக இருக்கும்போது யாரால் என்ன செய்து விட முடியும்? இவனுக்கு அழிவு காலம் நெருங்கி விட்டது. அதனால்தான் இப்படிப் பிதற்றுகிறான்'' என்றார். சிசுபால னின் கோபம் அதிகரித்தது. அவன் பீஷ்மரைத் திட்டினான். கிருஷ்ணரை வாய்க்கு வந்தபடி வையவே, பீமன் கடுங் கோபம் கொண்டு எழுந்தான்.

அவன் சிசுபாலனைத் தாக்கப் போகவே பீஷ்மர் அவனைத் தடுத்து நிறுத்தினார். அவர் யாவரும் கேட்கும் படியாக சிசுபாலன் பிறந்த கதையைக் கூறலானார்.

இந்த சிசுபாலன் பிறக்கும் போது மூன்று கண்களும் நான்கு கைகளும் கொண்டிருந்தான். பிறக்கும் குழந்தை அழுவது போல அழாமல் கழுதை கத்துவது போலக் கத்தினான். அக் குழந்தையின் அந்த விசித்திர உருவத் தைக் கண்டு அவனது தாய் சாத்வதியும் தந்தை தனமோகனும் பயந்து போய் அதைக் குப்பையில் எறிந்து விடத் தீர்மானித்தார்கள். அப்போது ஒரு அசரீர வாக்கு ''நீங்கள் இவனை குப் பையில் போட்டு விடாதீர்கள். இவன் பலசாலியாகத் திகழ்வான். இவன் இப்போது இறக்கவும் மாட்டான். இவனை எவன் தூக்கும் போது இவனது மூன்றாவது கண்ணும் அதிகப்படியான இரு கைகளும் மறை கின்றனவோ அவன்தான் இவனைக் கொல்பவன்'' என்று கூறி யது.

அதைக் கேட்ட சாத்விகி ஆறுதல் அடைந்து அப்போது முதல் தன் வீட்டிற்கு வருபவர்களிடம் எல்லாம் அந்தக் குழந்தையைக் கொடுத்துப் பார்க்கலானாள். இப்படி இருக்க ஒரு

நாள் பலராமனும் கிருஷ்ணனும் தன் அத்தை வீடான சேதி நகர அரண் மனைக்குச் சென்றார்கள். அவர்கள் சாத்விகியைக் கண்ட போது அவள் தன் குழந்தையை பலராமனிடம் கொடுத்தாள்.

பலராமன் அதைத் தூக்கியபோது அதில் எவ்வித மாற்றமும் ஏற்பட வில்லை. ஆனால் அடுத்து கிருஷ்ணரி டம் அவள் அக்குழந்தையை கொடுத்த போது கிருஷ்ணரிடம் இருந்த அக் குழந்தையின் மூன்றாவது கண்ணும் அதிகப்படியான கைகளும் மறைந்து போயின.

அதைக் கண்ட சாத்விகி பயந்து ''இவனுக்கு நீதான் எதிரியாவாயாம். நீ இவன் செய்யும் தவறுகளை மன் னிக்க வேண்டும்'' என்று வேண்டி னாள். கிருஷ்ணரும் அவனது நூறு தவறுகளை மன்னிப்பதாக வாக்களித் தார். இப்போது சிசுபாலனின் தவறு கள் நூறுக்குப் பக்கமாக உள்ளன.

பீஷ்மர் இப்படிக் கூறியதைக் கேட்டு சிசுபாலன் அவரையும் கிருஷ் ணரையும் கண்டபடி திட்டலானான். கிருஷ்ணரும் அவன் வைத வசைகளை எண்ணிக் கொண்டே வந்தார். நூறு வசைவுகளானதும் அவர் எழுந்து ''இந்த சிசுபாலன் என் அத்தையின் மகன். ஆனாலும் இவன் யாதவர் களைப் பழித்துக் கொண்டே இருக் கிறான். நாங்கள் பிராக்ஜோதிஷபுரத் தின் மீது படை எடுத்துப் போயிருந்த போது இவன் துவாரகைக்குள்



நுழைந்து அந்நகருக்குத் தீ வைத்தான். நாங்கள் ரைவதபர்வதத்தில் தங்கி இருந்த போது இவன் அங்கு வந்து எங் களில் சிலரைக் கொன்று சில பெண் களைச் சிறைபிடித்துக் கொண்டும் சென்றான்'' என்று கூறி மேலும் தொடர்ந்தார்.

''என் தந்தை அசுவமேத யாகம் செய்த போது இவன் யாகக் குதிரை யைத் திருடிச் சென்றான். பப்ருவாகன னின் மனைவியை அபகரித்தான். ருக் மிணியை மணக்க இவன் செய்த முயற்சிகள் எதுவும் பலிக்கவில்லை. இப்படியாக இவன் செய்த அக்கிரமங் களுக்கு கணக்கே இல்லை. ஆனால் என் அத்தைக்குக் கொடுத்த வாக்கி னால் இதுவரை சகித்து வந்தேன்.''



இவ்வாறு கிருஷ்ணர் கூறி முடித்ததும் சிசுபாலன் ஏளனமானச் சிரித்து ''கிருஷ்ணா! நான் மணக்க விரும்பிய பெண்ணை நீ மணந்து கொண்டாய் என்று சொல்ல உனக்கு வெட்கமாக இல்லையா? ஏதோ உன் தயவால்தான் நான் உயிர் வாழ்வது போலக் கூறுகிறாயே. உன்னிடம் எனக்கு பயமே இல்லை. உன்னால் என்ன செய்ய முடியுமோ செய் பார்க்கலாம்'' என்று கூறினான்.

கிருஷ்ணரும் உடனே தன் சக்கராயுதத்தை அவன் மீது பிரயோகித்தார். அது சிசுபாலனின் தலையை வெட்டி எறிந்து விட்டு அவரிடமே திரும்பி வந்தது. சிசுபாலன் இவ்வாறு மடிந்து ஒழிந்தான். அவனது உடலிலிருந்து ஒரு ஒளி கிளம்பி வந்து கிருஷ்ணரோடு ஐக்கியமாகியது. அதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள்.

தருமர் சிசுபாலனின் உடலைத் தக்கபடி அடக்கம் செய்ய ஏற்பாடு செய்தார். பிறகு சிசுபாலனின் மகனுக்கு மகுடாபிஷேகம் செய்து சேதி நாட்டு மன்னனாக்கினார். ராஜசூய யாகம் முடிவடைந்தது. தருமரும் யாகம் முடிந்த பின் நீராடி தாம் மேற்கொண்ட தீட்சையை விட்டார். மன்னர்கள் எல்லோரும் வெற்றிகரமாக ராஜசூய யாகம் செய்து முடித்ததற்காக தருமரைப் பாராட்டினார்கள்.

மன்னர்கள் ஒவ்வொருவராக தருமரிடம் விடை பெற்றுக் கொண்டு கிளம்பலானார்கள். தருமரும் அவர்களுக்கு தக்கபடி மரியாதை செய்து அனுப்பினார். அவர்களை வழியனுப்பி வரத் தம்பிகளையும் அனுப்பினார். கிருஷ்ணரும் எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டு துவாரகைக்குச் சென்றார்.

துரியோதனன் மட்டும் மயன் கட்டிய மாளிகையைச் சுற்றிப் பார்க்கத் தன் மாமா சகுனியுடன் தங்கி விட்டான். அச்சமயம் தருமரின் சபைக்கு வியாச முனிவர் வந்தார். அப்போது தருமர் தன் மனதைத் துளைத்துக் கொண்டிருந்த ஒரு சந்தேகத்தை அவரிடம் கேட்டார். ''இந்த ராஜசூய யாகத்தின் போது சிசுபாலன் கொல்லப்பட்டானே. இது ஒரு அபசகுனம்தானே.''

வியாசரும் ''ஆம். இது கெடுதலுக்

கான அறிகுறியே. இதன் விளைவு இப்போது தெரியாது. பதிமூன்று வருடங்களுக்குப் பிறகுதான் தெரியும். அப்போது க்ஷத்திரியர்கள் அழிவார்கள்'' என்று கூறினார். இதைக் கேட்டு தருமர் இடிந்து போனார். அர்ஜுனன் அவருக்கு ஆறுதல் கூறினான்.

மயன் கட்டிய மாளிகையைச் சுற்றிப் பார்க்கப் போன துரியோதனன் பல சமயங்களில் ஏமாந்து அவமானப் பட்டுப் போனான். ஓரிடத்தில் தண்ணீர் இருப்பதாக எண்ணித் தன் ஆடைகளை முழங்காலுக்கு மேல் தூக்கிக் கொண்டு நடந்தான். ஆனால் அங்கு நீர் இருக்கவில்லை. ஓரிடத்தில் தண்ணீர் இல்லை என அவன் நடந்து சென்றான். ஆனால் அங்கு தண்ணீர் இருந்தது. அதில் அவன் விழுந்து விட்டான் இதைக் கண்டு பாண்டவர்களும் துரௌபதியும் சிரித்து விட்டனர். தருமரோ துரியோதனன் உடுத்திக் கொள்ள உலர்ந்த ஆடைகளைக் கொண்டு வந்து கொடுத்தார்.

இதுபோல ஓரிடத்தில் கதவு இல்லையென எண்ணி துரியோதனன் போன போது அங்கு உண்மையிலேயே இருந்த கதவின் மீது போய் மோதிக் கொண்டான். இன்னொரு இடத்தில் கதவு இருப்பதாக எண்ணிச் சென்றான். அங்கு சுவர்தான் இருந்தது. அதன் மீது அவன் மோதிக் கொண்டான்.

ஓரிடத்தில் சமமான தரை என நினைத்து அவன் போன போது தாழ்வாக இருந்த அந்த இடத்தில் விழுந்தான். இன்னொரு இடம் மேடாக இல்லை என நினைத்து காலை வைத்த போது முழங்காலை காயப்படுத்திக் கொண்டான்.

இதெல்லாம் துரியோதனனுக்கு எரிச்சலை மூட்டியது. தருமருக்கு ராஜசூய யாகத்தால் பெருமை கிடைத்தது. மயன் நிர்மாணித்த அற்புத மாளிகை வேறு அவருக்குக் கிடைத்துள்ளது. இதனால் பொறாமை கொண்ட அவன் தருமரரிடம் விடை பெற்றுக் கொண்டு ஹஸ்தினாபுரத்திற்குத் திரும்பிச் சென்றான்.



**அம்புலிமாமா அனுபந்தம் - 90**

*நம் நாட்டு மரங்கள்*

# பிரியா மரம்

இந்த மரத்தின் இலை முட்டை வடிவில் நுனி சற்று நீண்டு இருக்கும் இலையின் இருபுறமும் சொரசொரப்பாக இருப்பதால் இந்த இலை மரப் பலகைகளையும் தந்தப் பொருள்களையும் தேய்த்து வழவழப்பாக்கப் பயன்படுத்தப்படு கிறது. இதன் மலர்கள் சிறியனவாயும் பச்சை நிறத்திலும் இருக்கும். இவை ஜனவரி, மார்ச் மாதங்களுக்கிடையே மலரும். இதன் பட்டை சாம்பல் நிறத்தில் உறுதியானதாக இருக்கும். இதை மருந்துகள் செய்யப் பயன்படுத்துகிறார் கள்.

இம்மரத்தைப் பற்றி புராணக் கதை ஒன்று உள்ளது. பரமசிவன் தம் வாகனமான நந்தி மீது அமர்ந்து போகையில் வழியில் வைதரணி நதி யைக்கண்டு நந்தியை நிறுத்திக் கீழே இறங்கினார். நந்தி தேவர் அங்கிருந்த ஒரு மரத்தின் இலை களைத் தொட்டார். அதைக் கண்ட சிவனார் "அந்த இலையை ஏன் தொட்டாய்?" என்று கேட்டார். நந்தியும் "இந்த இலையைத் தொட்ட அன்று நல்ல விருந்து சாப்பாடு கிடைக்குமாம்" என்றார்.

சிவனாரோ "அது உனக்கு எப்படி கிடைக் கிறதென்று பார்க்கிறேன்" என்று கூறி வேண்டு மென்றே நந்தி மீது அமர்ந்தவாறே பல இடங் களுக்கும் சென்றார். அதனால் அவர் கைலா சத்தை அடைந்த போது வெகு நேரமாகி விட்டது. கணவர் வருவார் வருவார் என்று எதிர்பார்த்த பார்வதி தேவி அவர் வெகு நேரமாகியும் வராதது கண்டு சாப்பிட உட்கார்ந்தார். அப்போது நந்தி தேவர் வரும் சத்தம் கேட்டு உணவுப் பண்டங் களை எடுத்துப் பார்வதி தேவி சட்டென நந்தியின் அறைக்குள் வைத்து விட்டுக் கணவரைக் காண வந்தாள்.

தன் அறைக்குள் சென்ற நந்தி தேவர் அங்கு விதவிதமான உணவுப் பண்டங்கள் இருப்பதைக் கண்டார். அவருக்கோ நல்ல பசி. அதனால் அவர் உட்கார்ந்து வயிறு நிறையச் சாப்பிட்டார். பரமசிவனே தடுக்க முயன்றும் நந்திக்கு விருந்து சாப்பாடு கிடைப்பதைத் தடுக்க முடியவில்லை. அதற்குக் காரணம் அந்த மரத்தின் இலை மீது உரசிப் பார்த்ததுதான். அந்த மரம் வேறு எதுவு மில்லை. பிரியா மரம்தான். அந்த மரத்தின் இலைக்கு அவ்வளவு மகிமை உள்ளது என்பதை இந்தப் புராணக் கதை கூறுகிறது.



*நம் நாட்டு முனிவர்கள் - 10*

# உதங்கர்

மகாபாரதம் போன்ற மாபெரும் காவியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள முக்கியமான முனிவர்களுள் உதங்கரும் ஒருவர்.

உதங்கர் சைல முனிவரின் சீடர். அவர் தம் படிப்பு முடிந்ததும் தம் குருவிடம் ''குருவே! தங்களுக்கு எதை குருதட்சணையாகக் கொடுத்து என் நன்றியைத் தெரிவிப்பது என்று எனக்குத் தெரியவில்லை. தாங்கள் என்ன விரும்புகிறீர்கள் என்று கூறினால் அதைச் சமர்ப்பிக்க முயல்கிறேன்'' என்றார்.

அதுகேட்டு அவரது குருவும் ''உதங்கா! எனக்கு எதுவும் வேண்டாம். என் மனைவி எதை விரும்புகிறாளோ அதைக்கொண்டு வந்து கொடு'' என்றார். உதங்கரும் குருவின் மனைவியைக் கண்டு தம் குரு கூறியதைச் சொல்லவே அவளும் ''எனக்குப் பௌஷ்ய மன்னன் மனைவி அணிந்திருக்கும் காதுக் குண்டலங்களை அணிந்து கொள்ள வேண்டுமென்று ஆசையாக உள்ளது'' என்றாள்.

உதங்கரும் பௌஷ்ய மன்னனைக் கண்டு தன் குரு பத்தினியின் விருப்பத்தைத் தெரிவித்தார். மன்னனும் அவரிடம் அந்தப்புரத்திற்குப் போய் அதை ராணியிடம் கேட்கும்படிச் சொன்னான். உதங்கர் அந்தப்புரத்துள் போன போது ராணி தென்படவில்லை. அவர் திரும்பி வந்து



மன்னனிடம் அதைக் கூறினார். மன்னனும் சற்று யோசித்து ''நீங்கள் இன்று குளித்து விட்டுக் கடவுளை தியானித்த பின் உணவு உண்டீர்களா?'' என்று கேட்டான். அவர் இல்லை எனவே மன்னனும் ''நீங்கள் நாளை அவ்வாறு செய்து விட்டுப் போனால் அவளைக் காண முடியும்'' என்றான்.



உதங்கர் மறுநாள் மன்னன் கூறியபடி செய்துவிட்டு அந்தப்புரத்திற்குப் போக அப்போது ராணியைக் காண முடிந்தது. உதங்கர் தான் வந்த காரணத்தைக் கூறவே, அவளும் தன் காதுக் குண்டலங்களைக் கழற்றி அவரிடம் கொடுத்தாள். உதங்கரும் அதை வாங்கிக் கொண்டு குருவின் ஆசிரமத்திற்கு திரும்பிச் சென்றார். வழியில் ஒரு குளத்தைக் கண்டு அதில் குளிக்க எண்ணி குண்டலங்களைக் கரையில் வைத்து விட்டு அவர் அதில் இறங்கினார்.

குளித்து விட்டு அவர் கரைக்கு வந்த போது ஒரு சன்னியாசி அக்குண்டலங்களை எடுத்துக் கொண்டு ஓடுவதைக் கண்டார். உதங்கர் அவனைத் துரத்திக் கொண்டு ஓடினார். அந்த சன்னியாசி ஒரு குகைக்குள் நுழையவே உதங்கரும் அதற்குள் சென்றார். அச்சன்னியாசி பாம்பாக மாறி பூமிக்குள் சென்றான். உதங்கர் இந்திரனை தியானிக்க, அவனது வஜ்ஜிராயுதம் அக்குகையைப் பிளந்தது.

அப்போது பாதாள லோகத்திற்குச் செல்லும் வழி தென்படவே உதங்கர் அவ்வழியில் சென்றார். அவர் சர்ப்பராஜனிடம் தன் குண்டலங்களைத் தட்சகன் அபகரித்து வந்தான் எனக் கூறவே சர்ப்பராஜனும் அக்குண்டலங்களை வாங்கி உதங்கரிடம் கொடுத்தான்.

உதங்கர் பாதாள லோகத்தில் இரு பெண்கள் பட்டு நெசவு செய்வதைக் கண்டார். அவர்களது தறிச் சக்கரங்களில் பனிரெண்டு ஆரக் கால்களும் அவற்றை ஆறு சிறுவர்கள் சுற்றுவதையும் கண்டார். இவை இரவு பகலையும், பனிரெண்டு மாதங்களையும், ஆறு பருவ காலங்களையும் குறிப்பதாம்.

உதங்கர் ஆசிரமத்திற்குப் போய் குரு பத்தினியிடம் குண்டலங்களை அளித்தார். இக்கதையால் விடா முயற்சி, புதிய விஷயங்களை அறிதல் போன்றவை எவ்வளவு முக்கியமானவை என்பது தெரிகிறது.

# உங்களுக்குத் தெரியுமா?

1. சதுரங்கப் பலகையில் எவ்வளவு கட்டங்கள் உள்ளன?
2. உலகப் பெரும் காவியங்களில் மிகப் பெரியது எது?
3. அதிக பூகம்பங்கள் ஏற்படும் நாடு எது?
4. முன் காலத்தில் செய்திகளை அனுப்பப் பயன்படுத்தப்பட்ட பறவை எது?
5. கற்களை உண்ணும் பறவை எது?
6. சூரிய மண்டலத்தில் மிகப் பெரிய கிரகம் எது?
7. நைல் நதியின் நன்கொடை என எந்த நாட்டிற்குப் பெயர்?
8. மழை எவ்வாறு உண்டாகிறது?
9. ஜைன மத ஸ்தாபகர் யார்?
10. மனிதனின் இருதயத்தின் அளவு என்ன?
11. தர்மா மீட்டரில் எந்த உலோகம் பயன்படுத்தப்படுகிறது?
12. அமெரிக்காவின் முதல் ஜனாதிபதி யார்?
13. மூன்று பெரும் மாக்கடல்கள் யாவை?
14. நர்ஸ் தொழிலுக்குக் காரணம் ஒரு பெண்மணி. அவர் யார்?
15. சூரிய கிரணத்திலுள்ள விடமின் எது?
16. நம் நாட்டில் வாக்குரிமை பெறக் குறைந்த பட்ச வயது எவ்வளவு?
17. லீப் வருடம் எவ்வளவு ஆண்டுகளுக்கு ஒருமுறை வருகிறது?
18. 'புல் ஃபைட்' என்ற காளைச் சண்டைக்கு பெயர் பெற்ற இரு நாடுகள் யாவை?

## விடைகள்

1. 64 கட்டங்கள். 32 கருப்பு. 32 வெள்ளை.
2. மகாபாரதம்.
3. ஜப்பான்.
4. புறாக்கள்.
5. நெருப்புக் கோழி.
6. வியாழ கிரகம்.
7. எகிப்து.
8. மேகங்களிலுள்ள நீர்த்துளிகள் கனமாகி விட்டால் கீழே விழுந்து மழையாகின்றன.
9. வர்த்தமான மகாவீரர்.
10. மனிதனின் கைப்பிடி அளவு.
11. பாதரசம் (திரவ உலோகம்).
12. ஜார்ஜ் வாஷிங்டன்.
13. பசிபிக், அட்லாண்டிக், இந்து மகா சமுத்திரம்.
14. ஃப்ளாரன்ஸ் நைடிங்கேல்.
15. 'டி' விடமின்கள்.
16. 18 வருடங்கள்.
17. நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை.
18. ஸ்பெயின், மெக்ஸிகோ.



# தங்கப் பெண் சிலை

கோமேதகபுரியை கோமுகவர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் விஷ்ணு பக்தன். எனவே ஒரு அழகான பெருமாள் கோவிலைக் கட்ட விரும்பினான். அந்த வேலையை சிற்பக்கலையில் கைதேர்ந்த இளம் வயதினனான நாகய்யனிடம் மன்னன் ஒப்படைத்தான். அந்தக் கோவில் கட்டும் இடத் தில் ஒரு ஓரமாகக் குடிசை போட்டுக் கொண்டு நாகய்யன் தன் தந்தையோடு இருந்து வரலானான்.

நாகய்யன் கோவிலில் சிலைகளை வைக்கவும் மூலவிக்கிரகத்தை உருவாக்கவும் நல்ல பெரிய கற்களைத் தேர்ந்தெடுக்க மலைப் பகுதிகளுக்குச் சென்றான். மற்ற சிலைகளைச் செய்யக் கற்கள் கிடைத்த போதிலும் மூல விக்கிரகத்தை உருவாக்க அப்பழுக்கு இல்லாத ஆறடி நீளக்கல்லாக அவனுக்குக் கிடைக்கவில்லை.

மாலையாகி இருட்டவும் தொடங்கி விட்டது. அவனோடு வந்த ஆட்கள் ''இப்போது இருட்டு விட்டது. அதனால் தலைநகருக்கு இப்போது திரும்பிப் போய் விடலாம்'' என்றார்கள். நாகய்யனோ ''இவ்வளவு தூரம் வந்து விட்டோம். இன்னும் கொஞ்ச நேரம் தேடிப் பார்க்கலாம்'' என்று பிடிவாதமாகக் கூறவே அவர்களும் வேறு வழியின்றித் தேடலானார்கள். நல்ல வேளையாக ஓரிடத்தில் ஒரு கல் கிடைத்தது.

அது ஆறடி நீளம். தங்கம் போல் மின்னிக் கொண்டிருந்தது. நாகய்யன் மகிழ்ந்து போய் அதனருகே சென்று அதனைப் பார்த்தான். மூலவிக்கிரகம் செய்வதற்கு அது ஏற்ற கல்லே எனத் தெரிந்து கொண்டான். எனவே அதனை வண்டியில் ஏற்றி விட்டுத்தன் ஆட்களோடு உடனேயே தலைநகருக்குத் திரும்பி வந்தான்.

—கி. அருணா—



அன்றிரவு நாகய்யன் அயர்ந்து தூங்கி கொண்டிருந்த போது ஒரு கனவைக்கண்டான். அக்கனவில் அழகிய பெண் ஒருத்தி தோன்றி ''நாகய்யா நான் ஒருகந்தர்வ கன்னிகை. ஒருசாபத்தின் காரணமாக இந்தக் கல்லாக மாறியுள்ளேன். நீ கைதேர்ந்த சிற்பி என்பது எனக்குத் தெரியும். நீ உன் கையால் இந்தக் கல்லிற்கு என் உருவத் தைக் கொடு. அப்போது அதிர்ஷ்டம் இருந்தால் எனக்கு இந்த சாபத்திலிருந்து விடுதலை கிடைக்கும். நான் உயிர் பெற்று மீண்டும் கந்தர்வ கன்னிகையாக ஆகிவிடுவேன்'' என்றாள்.

நாகய்யன் அக்கனவு கண்டு திடுக்கிட்டு விழித்து எழுந்தான். அது கனவுதான். ஆனால் அந்தக் கனவு தனக்கு ஏன் வந்தது என்று எண்ணி அவன் ஆச்சரியப்படலானான். அக்கல்லை முதலில் அவன் பார்த்தபோதே அவன் மனதில் ஏதோ சந்தேகம் தோன்றியது. அதை உறுதிபடுத்துவது போல அக்கனவும் வரவே அது பற்றி அவன் யோசிக்கலானான்.

காலையானதும் நாகய்யன் தான் கண்ட கனவைத் தன் தந்தையிடம் கூறினான். தந்தையும் ''மகனே! நீ கொண்டு வந்திருக்கும் கல் மிக அபூர்வமானது என்றே தெரிகிறது. உன் கனவு பற்றிக் கூற வேண்டுமானாலும் அதுவும் உண்மைதான் என்று நினைக்கத் தோன்றுகிறது. எனவே இதனை மன்னருக்குத் தெரிவி'' என்று யோசனை கூறினான்.

தன் தந்தையின் யோசனைப்படி அவன் உடனே அரண்மனைக்குச் சென்று மன்னனைக் கண்டு தான் கொண்டு வந்த கல்லைப் பற்றியும் அதன் தொடர்பாகத் தன் கண்ட கனவைப் பற்றியும் கூறினான். அதைக் கேட்ட மன்னன் உடனே ஒரு வீரனை அனுப்பி ஆஸ்தான சோதிடரை அழைத்து வரச் சொன்னான்.

ஆஸ்தான சோதிடர் வந்து விஷயத்தைத் தெரிந்து கொண்டு கண்களை மூடிக் கொண்டு விரல் விட்டு ஏதோ கணக்குப் போட்டுப் பார்த்தார். பிறகு அவர் ''அரசே! நாகய்யன் கனவில் கண்ட பெண் ஒரு கந்தர்வ கன்னிகையே. ராட்சஸ சிற்பி மயனின் சீடர்களில் ஒருவனான வராலகன் என்ப

வன் மானசி என்ற கந்தர்வப் பெண்ணைக்கண்டு அவளது அழகில் மயங்கி அவளைப் போன்ற ஒரு சிலையை உருவாக்க விரும்புவதாக அவளிடம் கூறவே அவளும் அவன் அச்சிலையை உருவாக்க ஒய்யாரமாக நின்றாள். அவனும் சிலையை உருவாக்கினான். அதைக் கண்டு மானசி சிரித்து ''இதுவா என் உருவம்? கொஞ்சமும் பொருத்தம் இல்லையே. இவ்வளவு தானா உன் திறமை?'' என்று கேலி செய்தாள். இதனால் வராலகன் கோபம் கொண்டு அவளைக்கல்லாக்கி பூலோகத்தில் விழும படி விட்டெறிந்தான். இதனால் இந்தக் கல்லில் மூல விக்கிரகத்தை உருவாக்குவது அபசாரம் என நான் நினைக்கிறேன். இந்தக் கல்லைக் கொண்டு வேறு யாருடைய சிலையை உருவாக்கினாலும் அவர் இந்த சிலை அழியாது இருக்கும் வரை இளமையுடன் உயிர் வாழ்வார்கள்'' என்றார்.

அதைக் கேட்ட மன்னன் மகிழ்ந்து ''நாகய்யா! நீ இந்தக் கல்லில் என் உருவத்தைச் செதுக்கு. இந்த வேலையை நீ பத்து நாட்களுக்குள் செய்து முடிக்க வேண்டும்'' என்று கூறினான். நாகய்யன் தலை குனிந்தவாறே மன்னன் கூறியதைக் கேட்டான். பிறகு அவன் தன் இருப்பிடத்திற்கு வந்து மன்னன் கூறியதைத் தன் தந்தையிடம் கூறினான். அவனது தந்தையும் ''மகனே, உன் மனதில் எது சரி என்று படுகிறதோ அதைச் செய். நீ யாருக்காகவும் பயப்பட வேண்டாம்'' என்று கூறினான்.

அன்றிரவு நாகய்யன் தூங்கிய





போது அவன் கனவில் கந்தர்வ கன்னிகை வந்தாள். அவள் ''மன்னன் தன் சிலையை இந்தக் கல்லில் உரு வாக்கச்சொன்னது சுய நலத்தால்தான். அவன்தான் இளமையுடன் இருக்க ஆசைப்படுகிறான். ஆனால் இந்தக் கல் நான்தான். எனவே இதில் என் சிலையை உருவாக்குவதுதான் நியா யம்'' என்றாள்.

நாகய்யனும் இவற்றை எல்லாம் எண்ணியோசித்தான். முடிவில்அவன் அக்கல்லில் கந்தர்வ கன்னிகையின் உருவத்தையே செதுக்குவது என்ற முடிவிற்கு வந்தான். மறுநாள் காலை அவன் அக்கல்லின் முன் உட்கார்ந்து கடவுளை தியானித்தான். பிறகு அவன் தன் மனதில் கனவில் கண்ட கந்தர்வ கன்னிகையின் உருவத்தைக் நிலை நிறுத்திக் கொண்டான். அதன்பின் அவன் உளியை எடுத்து முழு கவனத் துடன் அக்கல்லில் கந்தர்வ கன்னிகை யின் உருவத்தைச் செதுக்கலானான்.

அதை உருவாக்கும் போது அவன் அச்சிலை தன்னோடு பேசி உற்சாக மூட்டுவது போலவும்தான் செதுக்கும் ஒவ்வொரு அங்கத்தையும் அது தன் புன்னகையால் ஆமோதிப்பது போல வும் உணர்ந்தான். எனவே அவன் தன் கவனத்தைச் சிதற விடாமல் அச் சிலையை உருவாக்குவதிலேயே ஈடு பட்டிருந்தான்.

பத்து நாட்களில் கந்தர்வ கன்னிகை யின் சிலை தயாராகி விட்டது. நாகய் யன் அந்தச் சிலையை நன்கு பார்த் தான். அது முழுக்க முழுக்கத் தான் கனவில் கண்ட கந்தர்வ கன்னிகை போலவே அமைந்திருப்பது கண்டு திருப்தியும் மகிழ்ச்சியும் அடைந்தான்.

மன்னன் ராணியுடன்தான் கூறிய பத்தாவது நாளன்று தன் சிலையைப் பார்க்க சிற்ப கூடத்திற்கு வந்தான் அவன் கண்ணில் முதலில் தென்பட் டது கந்தர்வ கன்னிகையின் அற்புதச் சிலைதான். அதன் அழகைக் கண்டு அவன் மெய்மறந்து நின்றான். சற்று நேரத்திற்குப்பின் அவன் நாகய்யனி டம் ''இந்த அழகிய பெண் யார்? இதை இவ்வளவு அழகாகச்செதுக்கிய உன்னை எவ்வளவு பாராட்டினாலும் தகும்'' என்று கூறினான்.

அதன் பிறகு மன்னன் தன் சிலை

பற்றி நினைவு கொண்டு ''ஆமாம், என் சிலை எங்கே? இந்தச் சிலையை நீ அந்தத் தங்க நிறக் கல்லைக் கொண்டு செதுக்கி விட்டாயா என்ன?'' என்று கேட்டான். நாகய்யனும் தலை குனிந்தவாறே ''தங்களது கட்டளைப் படி நான் நடக்காததற்கு மன்னிக்க வேண்டும். நான் கொண்டு வந்த அற்புதக் கல்லில் கந்தர்வ கன்னிகையின் உருவத்தைச் செதுக்கும் நிர்பந்தம் ஏற்பட்டு விட்டது. நீங்களே அச் சிலையை இப்போது கண்டு புகழ்ந்தும் விட்டீர்கள்'' என்றான். இதைக் கேட்ட மன்னனுக்கு கட்டுக்கடங்காத கோபம் வந்து விட்டது.

அவன் நாகய்யனைப் பார்த்து ''அக் கல்லில் நான் என் உருவத்தைச் செதுக்கச் சொன்னால், என் கட்டளையை மீறி நீ கந்தர்வ கன்னிகையின் உருவத்தைச் செதுக்கினாயா? என் கட்டளையை மீறிய உனக்கு என்ன தண்டனை விதிப்பேன் தெரியுமா? தூக்கு தண்டனைதான்'' என்று கோபத்தோடு கூறினான்.

நாகய்யன் எதுவும் பேசவில்லை ஆனால் ஆகாயத்தில் அப்போது இடி இடித்து மின்னல் வெட்டியது. எங்கும் கருமேகங்கள் சூழ்ந்து இருளாக்கியது. மழை பெய்யலாயிற்று. இதைக்கண்டு மன்னனும் அரசியும் நாகய்யனும் திகைத்து மலைத்துப் போனார்கள். அப்போது ஒரு இடி அந்த கந்தர்வ கன்னிகையின் சிலை மீது விழுந்தது. மறுகணமே அந்தச் சிலை சுக்கு நூறாக உடைந்து சிதறியது.

அப்போது மன்னனுக்கு ஆஸ்தான சோதிடர் கூறியது நினைவிற்கு வந்தது. அந்த கல்லில் யார் உருவத்தைச் செதுக்கினாலும் அது இருக்கும் வரை தான் அவரும் உயிருடன் இருப்பார் என்பதே அது. சிற்பி மட்டும் தன் கட்டளைப்படி அக்கல்லில் தன் உருவத்தைச் செதுக்கி இருந்தால் இப்போது தன் உயிரே போயிருக்குமே என எண்ணி மன்னன் நடுங்கினான். நல்ல வேளை. அவ்வாறு நேராமல் உயிர் தப்பியதே என எண்ணி அவன் மகிழ்ந்தான்.





# வலை வீசுவானே!

ஒரு கிராமத்து விவசாயியின் மூன்று மகன்கள் தம் தந்தை இறந்தபின் அவர் விட்டுப் போனவற்றைப் பங்கிடலானார்கள். மூத்தவன் வீடு தனக்கு என்று எடுத்துக் கொண்டான். இரண்டாவது மகன் வயல் தனக்கு வேண்டும் என்று எடுத்துக் கொண்டான். மூன்றாவது மகன் அவர்களிடம் ''எனக்கு ஒன்றுமே இல்லையா?'' என்று கேட்டான்.

அவனது இரு அண்ணன்மார்கள் பரண் மீது கிடந்த கயிறுச் சுருள் ஒன்றை எடுத்துக் கொடுத்து ''இது தான் உனக்கு'' என்று கூறினார்கள். கடைசி மகனும் ''சரி. இதைக் கொண்டே பணம் சம்பாதித்து வருகிறேன்'' என்று சொல்லிவிட்டு அதை எடுத்துக் கொண்டு தன் கிராமத்தை விட்டுச் சென்றான்.

அவன் தன் ஊரை விட்டுக் கொஞ்ச தூரம் போனதும் ஒரு காட்டை அடைந்தான். அங்கு பலவகைப்பட்ட பிராணிகள் இருந்தன. அவன் தன்னிடமிருந்த கயிற்றுச் சுருளைக் கொண்டு ஒரு வலை பின்னினான். அதைக் கொண்டு அவன் ஒரு அணிலையும் ஒரு முயலையும் பிடித்தான். பிறகு ஒரு மரக் கூண்டைச் செய்து அதில் அவை இரண்டையும் அடைத்து எடுத்துக் கொண்டு ஒரு குளத்தின் கரையை அடைந்தான்.

அப்போது சற்று தூரத்திலுள்ள ஒரு புதருக்குள் ஒரு கரடி நுழைவதை அவன் கண்டான். அவன் அங்கே ஒரு மரத்தடியே உட்கார்ந்து என்ன செய்யலாம் என்று யோசிக்கலானான்.

அந்தக் குளத்தினுள் ஒரு ராட்சஸனும் இருந்து வந்தான். அவன் நீர் மட்டத்திற்கு மேல் தன் தலையை நிமிர்த்தி மரத்தின் கீழ் உட்கார்ந்திருக்கும் குடியானவனின் மகனைக் கண்டான். அவன் என்ன செய்து கொண்டிருக்கிறான் என்பது அவனுக்கு விளங்க

—கி. வெங்கடாசலம்—

வில்லை. எனவே அவன் குளத்தின் கீழ் மட்டத்திற்குப் போய் தன் மகனிடம் ''குளக்கரையில் யாரோ ஒருவன் என்னவோ செய்து கொண் டிருக்கிறான். அவன் என்ன செய்கி றான் என்று பார்த்து வா'' என்று சொல்லி அனுப்பினான்.

குட்டி ராட்சஸனும் குளக்கரைக்கு வந்து மரத்தின் கீழ் உள்ள குடியான வனின் மகனிடம் ''இங்கே நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டான். குடியானவனின் மகனும் வந்திருப்பவன் ராட்சஸன் எனக் கண்டு பயப்படவில்லை, ராட்சஸர் களுக்கு அறிவு போதாது என்று அவ னுக்குத் தெரியும். அதனால் அவன் ''பார்த்தால் தெரியவில்லையா? இந்த வலையை வீசி இந்தக் குளத்தைப் பிடிக்க போகிறேன். அதனால் நீங் களெல்லாம் வேறு இடத்திற்குத்தான் போக வேண்டும்'' என்றான்.

குட்டி ராட்சஸன் உடனே குளத்துக் குள் குதித்து தன் தந்தையிடம் போய் ''அவன் நம் குளத்தை வலை வீசிப் பிடிக்கப் போகிறானாம். அதனால் நம்மை வேறிடத்திற்குப் போகச் சொல்கிறான்'' என்றான். பெரிய ராட் சஸனும் ''அடடா! இது சிக்கலான பிரச்னை. நீ அவனோடு பந்தயம் போடு. அதில் நீ தோற்று விட்டால் வேறு எங்காவது போய் விடுவதாகக் கூறு. முதலில் மரத்தில் ஏறும் பந்தயம் போடு'' என்று கூறி அனுப்பினான்.

குட்டி ராட்சஸனும் கரைக்கு வந்து



குடியானவனின் மகனிடம் மரத்தில் ஏறும் பந்தயம் போட்டான். ஆனால் குடியானவனின் மகனோ ''நான் இப் போது வேலையில் மூழ்கி இருக் கிறேன். எனக்கு பதில் என் ஒரு தம்பி உன்னோடு பந்தயம் போட வரு கிறான்'' என்று கூறி மரக் கூண்டி லிருந்த அணிலை எடுத்து வெளியே விட்டான். அது விர்ரென ஓடி மரத்தின் உச்சாணிக்கிளைக்குப் போய் விட்டது.

குட்டி ராட்சஸனால் அவ்வாறு செய்ய முடியாததால் அவன் தன் தந்தையிடம் போய் ''நான் மரம் ஏறும் பந்தயத்தில் தோற்றுவிட்டேன்'' என்றான். பெரிய ராட்சஸனும் ''அப்படியானால் அவனை ஓட்டப் பந்தயத்திற்கு அழைத்துத் தோற்கடித்து



விடு'' என்று கூறி அவனை அனுப்பினான். குட்டி ராட்சஸனும் கரைக்கு வந்து ''என்னோடு ஓட்டப் பந்தயம் போடு. அதில் நீ தோற்று போனால் பேசாமல் இங்கிருந்து போய் விட வேண்டும்'' என்றான்.

குடியானவனின் மகனும் ''இதோ பார். என் வேலை முடியவில்லை. என் இன்னொரு தம்பியை அனுப்புகிறேன். அவனோடு பந்தயம் போடு'' என்று கூறி மரக் கூண்டைத் திறந்து முயலை விட்டான். அது மிக வேகமாக ஓடியது குட்டி ராட்சஸனால் அதற்கு ஈடு கொடுக்க முடியவில்லை.

அவன் மறுபடியும் தன் தந்தையிடம் போய்த்தான் தோற்றதைக் கூறவே பெரிய ராட்சஸனும் ''இந்த முறை குத்துச் சண்டைக்குக் கூப்பிடு. அவன் தோற்று விடுவான்'' என்று கூறி அனுப்பினான். குட்டி ராட்சஸனும் கரைக்கு வந்து குடியானவனின் மகனிடம் ''இந்தத் தடவை நாம் குத்துச் சண்டை போட்டுப் பார்க்கலாம் வா'' என்றான்.

குடியானவனின் மகனோ ''எனக்கு அதற்கு நேரமில்லை. என் தாத்தா அந்தப் புதருக்குள் படுத்திருக்கிறார். நீ போய் அவரோடு குத்துச் சண்டை போடு பார்க்கலாம்'' என்றான் ராட்சஸனின் மகனும் புதருக்குள் போனான். அங்கிருந்த கரடி அவனை அடித்து காயப்படுத்தவே அவன் தந்தையிடம் ஓடி மறு படியும் தான் தோற்றதைக் கூறினான்.

அதைக் கேட்ட பெரிய ராட்சஸன் பயந்து ''இவன் மிகுந்த பலசாலி போலிருக்கிறது இவனுடன் சமாதானமாகப் போவதே நல்லது. அவன் என்ன கேட்டாலும் அதைக் கொடுப்பதாகச் சொல்'' என்று கூறி அனுப்பினான். குட்டி ராட்சஸனும் மறுபடியும் போய் நாம் சமாதானமாகப் போய் விடலாம். உனக்கு எவ்வளவு பணம் வேண்டுமோ கேள்'' என்றான். குடியானவனின் மகனும் ''சரி. எனக்கு இந்த என் தொப்பி நிறையத் தங்க நாணயங்களைக் கொடுத்தால் போதும். நான் இங்கிருந்து போய் விடுகிறேன்'' என்றான். குட்டி ராட்சஸனும் தான் போய்ப் பணப் பையை எடுத்து வருவதாகக் கூறிவிட்டுச்

சென்றான்.

குட்டி ராட்சஸன் திரும்பி வருவதற்குள் குடியானவனின் மகன் ஒரு ஆழமான குழியைப் பறித்து அதன் மீது அடியில் பெரிய ஓட்டை செய்யப்பட்ட தன் தொப்பியை வைத்து மறைத்தான். குட்டி ராட்சஸன் நாணயப் பையோடு வந்து நாணயங்களைக் குடியானவனின் மகன் வைத்திருந்த தொப்பியில் கொட்டினான். ஆனால் தொப்பி நிறையாமல் நாணயங்கள் குழிக்குள் விழுந்தன.

தொப்பி நிறையாதது கண்டு குட்டி ராட்சஸன் திரும்பிப் போய் தன் தந்தையிடம் தொப்பி நிறையாததைக் கூறினான். பெரிய ராட்சஸனும் ஆச்சரியப்பட்டவாறே ''சரி. அது நிறையும் வரை தங்க நாணயங்களை எடுத்துப் போய்ப் போடு'' என்றான். குட்டி ராட்சஸன் நான்கு பை தங்க நாணயங்களைக் கொண்டு போய்ப் போட்டபிறகே அந்தத் தொப்பி நிரம்பியது.

குடியானவனின் மகனும் குட்டி ராட்சஸனிடம் ''சரி. தொப்பி நிரம்பி விட்டது. பணத்தை எடுத்துக் கொண்டு நான் போய் விடுகிறேன்'' என்றான். குட்டி ராட்சஸன் அங்கிருந்து போனதும் அவன் குழியிலிருந்த தங்க நாணயங்களை எடுத்துக் கொண்டு தன் ஊருக்குச் சென்றான். அங்கு பெரிய வீட்டை வாங்கிக் கொண்டு சுகமாக வாழலானான்.

தம் தம்பியிடம் அவ்வளவு பணம் எங்கிருந்து கிடைத்தது என்று அவனது இரு சகோதரர்களும் கேட்டார்கள். கடைசி மகனும் ''எல்லாம் நீங்கள் எனக்குத் கொடுத்த கயிற்றுச் சுருளின் மகிமையால்தான்'' என்றான். அதைக் கேட்டு அவர்கள் இருவரும் ''அப்படியானால் அந்தக் கயிறை எங்களுக்குக் கொடு. நாங்களும் உன்னைப் போலப் பெரும் பணக்காரர்களாகி விடுகிறோம்'' என்றார்கள்.

கடைசி மகனும் கயிற்றுச் சுருளை அவ்விருவரிடம் கொடுத்தான். அதை வாங்கிக் கொண்டு போன அவ்விருவரும் என்ன ஆனார்கள் என்று யாருக்கும் தெரியவில்லை.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 ஜூலை மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. SESHAGIRI



S.G. SESHAGIRI

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மே 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.**

---

## மார்ச் மாதப் போட்டி முடிவு

*முதலாவது போட்டோ* : **கரை காணா மகிழ்ச்சி.**

*இரண்டாவது போட்டோ* : **கரை கண்ட மகிழ்ச்சி.**

*பரிசு பெற்றவர்* : **திரு. எஸ். பொன்னுசாமி, உடுமலைபேட்டை**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


---

THE MOST ENDEARING GIFT YOU CAN THINK OF
FOR YOUR NEAR AND DEAR WHO IS FAR AWAY

# CHANDAMAMA



**Give him the magazine in the language of his choice—**
Assamese, Bengali, English, Gujarati, Hindi, Kannada,
Malayalam, Marathi, Oriya, Sanskrit, Tamil or Telugu
**—and let him enjoy the warmth of home away from home.**

**Subscription Rates (Yearly)**

**AUSTRALIA, JAPAN, MALAYSIA & SRI LANKA**

By Sea mail Rs.**117.00** By Air mail Rs. **264.00**

**FRANCE, SINGAPORE, U.K., U.S.A.,
WEST GERMANY & OTHER COUNTRIES**

By Sea mail Rs. **123.00** By Air mail Rs. **264.00**

**Send your remittance by Demand Draft or Money Order favouring
*'Chandamama Publications'* to:**

CIRCULATION MANAGER **CHANDAMAMA PUBLICATIONS** CHANDAMAMA BUILDINGS
VADAPALANI MADRAS 600 026



A SHARP MIND NEEDS A SHARP PENCIL




NATARAJ®

* Offer available on 10s pack of Nataraj 621 HB and Nataraj Petals pencils only. Offer valid till stocks last.

QUALITY PRODUCTS FROM HINDUSTAN PENCILS LTD.